உ

சிவமயம்



# திருச்செந்திலாதிபன்



ஆறாம் தொகுப்பு

**வ. முத்தையா செட்டியார்**

(ராஜபாளையம்)

பாரதி தெரு,

தேவகோட்டை - 623 302

திருச்செந்திலாதிபன்



குருவாய் வருவாய் அருள்வாய் குமரனே

உ





கோட்டூர்

மந்திக்கருப்பர் என்ற மாகாளர்

# குருதேவர் - பாமாலை

பஞ்சபூத முதலாம் நிலம் – நகரேஷு காஞ்சி போற்றி
புதுப்பெரியவர் புகழ்பாடும் மாநகராம் காஞ்சி போற்றி
அளவிலா ஆலயங்கள் நிறைந்திட்ட அருள்மிகு காஞ்சி போற்றி
அன்பாலே அனைத்துலகும் ஒன்றுபட பாடுபடும் காஞ்சி போற்றி

மூன்றில் அவதரித்த முப்பெரும் சக்தி போற்றி
இருள்நீக்கி அருள்பொழியும் அற்புதசக்தி போற்றி
அறுபதனில் திருப்பாதங்கள் பதிக்கும் ஆன்மீகசக்தி போற்றி
அன்னை காமாட்சி பாதகமலம் போற்றும் குருசக்தி போற்றி

ஆதிசங்கரின் அறுபத்து ஒன்பதாம் ரிஷியே போற்றி
பன்மொழிகளில் பக்தி மார்க்கம் காட்டும் வித்தகா போற்றி
க்ஷேமம் செய்பவர் வழிவந்த ஜயேந்திரா போற்றி
உலகை உய்விக்க வந்த உத்தமா உபமன்யு போற்றி!

மனதை அடக்கும் மாவித்தை கூறும் மகரிஷி போற்றி
பாதயாத்திரைகள் செய்து பாவங்கள் தீர்க்கும் பரந்தாமா போற்றி
மோனதவம் புரிந்து முக்திக்கு வழிகாட்டும் மாமுனியே போற்றி
திருத்தலங்கள் தவறாது திருப்பணி செய்திடும் தீர்க்கதரிசியே போற்றி

மலர்ந்த முகமாய் காட்சி தரும் மகாதேவா போற்றி
நிர்வாக திறன்மிகு நித்திய மங்கள அரசே போற்றி
அண்ட சராசரங்களில் அறிவுஒளி ஏற்றும் அரனே போற்றி
அகில உலகும் ஞான அலை வீசும் அகத்தீஸ்வரனே போற்றி!

பெரியவரின் பெருமை சேர்க்கும் பேரின்ப நிலையே போற்றி
இளைய பெரியவர் பூஜிக்கும் தேவாதி தேவனே போற்றி
சளைக்காது சமுதாய சேவைகள் செய்திடும் நாராயணா போற்றி
அனைத்துமே அறிந்திட்ட அகிலாண்ட நாயகனே போற்றி!

ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர

கவிஞர் அ. மு. உடையப்பன்
பாரத ஸ்டேட் பாங்க்
சென்னை மண்டல அலுவலகம்

# பதிப்புரை

திருச்செந்தூர் ஆண்டவன் முன்னிலையில் எங்களது தந்தையார் அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மிகவும் சிறப்பாக 1976ல் நடந்தேறியது. இன்னமும் எங்கள் நெஞ்சங்களில் இனிமை நினைவாக நிழலாடுகிறது. அன்று தொடங்கிய அவர்கள் திருப்பணியில் மொத்த உருவம்தான் 'திருச்செந்திலாதிபன்' தொகுப்பு. இது ஆறாம் தொகுப்பாகும் அழகன் முருகனின் ஆறு முகங்களையும் இரண்டு, மூன்று நான்கு ஆண்டுகள் என்ற இடைவெளிகளில் தந்தவர்கள் எங்கள் தந்தையார்.

வள்ளுவன் பேசுவான்

'இனர்ஊழ்த்தும் நாருமலர் அணையிற் கற்றது
உணர விரித்து உரையர்தார்'

தான் கற்றவற்றை கேட்டவற்றை பிறருக்கு தரும் மலர்ந்த மலராக மணக்கும் பண்புடையாளர் எங்களது தந்தையார் ஏனைய செல்வங்கள் எல்லாம் பொக்கிஷம் ஆகமுடியாது, புத்தகங்களே பொக்கிஷங்கள் என்றும்(one who reads one who leads) படித்தவனே தலைமை ஏற்க்கும் தகுதியுடையவன் என்றும் கற்றலில் கேட்டலே நன்று என்றும் தீர்க்கமாய் சொல்லும் இதயமுடையவர்கள்.

தொகுப்பிலே தந்திருக்கும் சேதிகள் எல்லாம் பொக்கிஷங்களிலும் மேலானவை. ஆடும் மயிலில் தனிச்சிறப்பு திருச்செந்தூரின் சீர், பன்னீர் இலை பற்றிய குறிப்பு விபூதியின் விளக்கம், உருத்திராட்சம் பற்றிய உண்மைகள், ஓங்கார ஒலிபற்றி ஆய்வு தரும் செய்திகள், குரு வணக்கம் பல்வேறு முகங்கள் போன்றவை நமது சிந்தனைக்கு கிடைத்திருக்கும் மதிப்பிட முடியாத தகவல்கள்

பன்னிரு திருமறைகளில் இருந்து எல்லாம் வல்லவனின் புகழ் மணக்கும் பாடல்கள் தொகுப்பு முழுவதும் மணம் பரப்பிய வண்ணம் இருக்கின்றன. காணபத்யம், சைவம், சாக்தம் வைஷ்ணவம், சௌரம், கௌமாரம் போன்ற சமயம், பற்றிய பாடல்களும் மனதில்

இடம்பெறும் நறுமலர்கள். ஆங்காங்ககே திருப்புகழ். திருப்பாவை, கந்தரலங்காரம் கந்தரனுபூதி, கந்த-புராணம், சண்முகக்கவசம் போன்ற சிறுசிறு சிறப்பு மலர்களும் பூத்து ஒளிவிடுகின்றன. சிறுசிறு தனிப்பாடல்களும் திருச்செந்திலாதிபனுக்கு மேலும் சிறப்புச் சேர்த்து இன்னும் நறுமணம் ஊட்டிக்கொண்டிருக்கிறது. பதவி ஒய்வுபெற்ற நாளிலிருந்து ஏறத்தாழ இருபது ஆண்டுகள், 1976 முதல் இன்றுவரை செட்டிக்கப்பலுக்குத் துணையிருக்கும் திருச்செந்தூர் மன்னவனுக்கு, தேவகோட்டையிலிருந்து தொண்டுசெய்துகொண்டிருக்கிறார்கள். ஆம்! நமக்கெல்லாம் இறைவன் யார் என்பதையும், அவன் எங்கிருக்கிறான் அவனை நாம் அடைவது எப்படி, அவன் நம்மை நோக்கி வருவானா என்றெல்லாம் நமக்கு அவர்கள் சொல்வதாகவே இந்த தொகுப்பை எடுத்துக்கொள்ளலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

தந்தை மக்களுக்கு செய்யவேண்டிய கடமைகளையும் மக்கள் தந்தைக்கு ஆற்றும் உதவிகளையும் இந்த நல்ல சூழ்நிலையில் எங்கள் அன்னை திருமதி லெட்சுமி ஆச்சி அவர்களின் மனமகிழ்வையும் எங்கள் குடும்பத்தில் வள்ளுவன் சொன்னது போலவே காண்கிறோம்.

ஆறாம் தொகுப்புக்கு அணிந்துரையை கவிமாலையாக சூட்டியிருக்கும் பேராசிரியர் டாக்டர் அர. சிங்காரவடிவேலன், நாங்கள் மறக்கமுடியாத எங்களது நல்ல குடும்பம் என்கிற பல்கலை கழகத்தின் துணைவேந்தர் ஆவார்.

தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.

மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை
என்நோற்றான் கொல்எனுஞ் சொல்

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்

**அ. மு. உடையப்பன்**
அலுவலர் பாரத ஸ்டேட் பாங்க் சென்னை - 1

மு. ஏகநாதன்
மேலாளர் இந்தியன் பாங்க் காரைக்குடி

பேராசிரியர்
டாக்டர் **அர. சிங்காரவடிவேலன்** எம்.ஏ., பி. டி, பிஎச். டி.. சிஜிடி
தமிழ்த்துறைத் தலைவர்: ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி
65 தியாகிகள் சாலை தேவகோட்டை-623 302, ☏ 2684

## திருச்செந்திலாதிபன் - அணிந்துரை

திருச்செந்தில் அதிபனென்னும் திருச்செந்தூர்த் திருமுருகன்
திருநாமத்தால்
அருச்சனைகள் செய்வதற்கும் அனுதினமும் ஓதுதற்கும்
ஆன பாடல்
ஒருச்சேரத் தொகையாக்கி உயர்வாக்கும் உயர்மொழிகள்
ஊடே சேர்த்து
விரிச்சவுடன் மணங்கமழும் மலரளிப்பார் முத்தய்யா
செட்டி யாரே

கொத்தவரை வற்றலுடல் புத்தியவர் கத்திமுனை
குணத்தின் குன்று
பத்தரைப்பொன் சுத்தமனம் பாசமிகு வாசமலர்
பக்தி மிக்கார்
முத்தய்யா தமிழ்ச்சான்றோர் முத்துமணி பெற்றவர்கள்
கற்றோர் நண்பர்
மத்திமமாம் உடல்நலத்தும் பத்திமைசேர் நூலளித்தல்
பழக்க மாமே

கனிந்தமனம் மெலிந்தவுடல் கற்றார்மேல் கவிதையின்பால்
காதல் மிக்கார்
பணிந்தபுகழ் மாலையினைப் பரமபதம் தருமுருகன்
பாதம் சேர்த்தார்
அணிந்தபல மாலைகளில் அய்யாவின் மாலையிதே
அருமை என்றே
துணிந்துபுகழ் திருமுருகன் தூயமணி முடியிலிது
துலங்கு மாமே

முத்தாரம் மணியாரம் முல்லைமலர்க் கொத்தாரம்
என்று நித்தம்

பத்தாரம் தந்தாலும் பத்தாதாம் முருகனுக்குப்
பனுவல் ஆரம்

அத்தாரும் தந்தாலும் அரைகுறையாய் அமைந்தாலும்
அதனை ஏற்றுப்

பித்தாகும் முருகனுக்குப் பெரியவரின் மாலையிது
பிரிய மாமே

காலையிலே நீராடிக் கைகுளிர நீறாடிக்
கந்த வேளின்

மாலையிதை மனம்சூடி மற்றவரின் நலம்நாடி
மாண்பு காப்போர்

சோலையிலே நிழலபோலச் சொற்களிலே தமிழ்போலச்
சுகங்கள் காண்பர்

மாலையிதன் மணம்போல வழங்கியநம் முத்தயவேள்
வயங்கு வாரே

---

## சிதம்பர ரகசியம்

ஒவ்வொரு ஆன்மாவும இறைவனோடு கலந்து உணரும் உணர்வினைப் பெறவேண்டும்

அந்த உணர்வானது ஒரு ஆனந்த அனுபவப் பொருள் அந்த, ஆனந்தம ஆண்டவன் பக்தனுக்கு அளிக்கும் அமிர்தம் அதை உணருதல் அந்த ஆன்மாவுக்கு மட்டும் அளிக்குற பேறு. அந்தப் பேறுதான் சிதம்பர ரகசியம்.

அந்த அற்புத ரகசியம் அந்த ஆன்மாவுக்கும் ஆண்டவனுக்கும் நடக்கும் ரகசிய உறவு

நேவகோட்டை சுப. சுப்பிரமணியம் B. Com.

---

ஓம்



# ஆடும் மயிலே

## ஆடும் மயிலின் தனிச் சிறப்பு

அழகனவன் முருகன்பெயர் யார்பாட கேட்டாலும்
அழகோடு ஆடும் மயிலே — எங்கள்
ஆனைமுகன் தம்பியவன் திருமேனி தாங்கி தினம்
அசைந்தாடும் அழகு மயிலே

ஓம் எனும் பிரணவத்தின் உயர்வான பொருளதனை
முருகனும் சொல்லி நின்ருன் — அந்த
உயர்வான பிரணவத்தின் வடிவத்தின் அருகினிலே
அன்போடு ஆடும் மயிலே

தோகையின் அழகினிலே மயங்காத மனமில்லை
என்பதை நீயும் அறிவாய்—அழகு
தோடுடைய செவியனின் திருமகன் அருகிலே
திருப்பணி நாளும் புரிவாய்

திருச்செந்தி லாதிபன் திருப்புகழ் மாலையை
தினமுமே தேடி வருவாய் — என்றும்
தித்திக்கும் தமிழ்மாலை முத்தையன் தந்திட
திருவருளை நாளும் தருவாய்

தேவர்கள் மூவர்கள் யாவரும் போற்றிடும்
கந்தனின் புகழ் தன்னையே — நல்
முத்தாரம் மணியாரம் போலெனத் தமிழ்மாலை
தருபவர் முத்தையனே

சீரோடும் சிறப்போடும் பாரென்றும் திகழவே
சிறப்பாக பணி செய்பவர் — அந்த
சிறப்பான பணிகண்டு முருகனின் அருளோடு
அனுதினமும் ஆடும் மயிலே

மதுரகவி எம். வி குமார்
தென்ராயன் தெரு மதுராந்தகம்

# முத்தையா வாழ்க

மா. இராமலிங்கம் [எழில் முதல்வன்]
தமிழியல் துறை தலைவர் பாரதிதாசன் பல்கலைக் கழகம்

அறுசீர் விருத்தப் பாக்கள்

திருமலிந்த தனவணிகர் திகழ்ந்தோங்கு
செழும்பதியாம் தேவகோட்டை
மருவியுறை பெருமகனூர்; வடிவேலால்
பகைமுடித்த முருக வேளின்
திருவடிக்கே தொண்டியற்றும் திருவுடையார்
முத்தையா செட்டி யார்நல்
பரிவுடனே தொகுத்தளித்தார் பாமாலை
அதைப்பலகால் படித்தேன் கண்டீர்!

ஆராத காதலுடன் ஆண்டவனை
நாடோறும் அன்பால் எண்ணிப்
பாராய ணம்செய்யப் பாடல்களும்
இடையிடையிடையே படமும், நன்கு
தேராதோர் சிந்தைதனைத் தெளிவிக்கும்
குறிப்புகளும் செறிந்த நூலைத்
தீராத காதலுடன் செய்துள்ளார்
முத்தையாச் செட்டி யார்காண்!

பழம்பனுவல் முதலாகப் புதுநூற்கள்
ஈறுகப் பயின்று தோய்ந்து
ஒழுகுநறும் சுவைப்பகுதி ஒவ்வொன்றாய்த்
தெரிந்தெடுத்தே ஒருங்கு கோத்து
இழைத்தமணிக் கோவைஇதோ எடுத்தணிந்து
கொள்ளுங்கள் என்னு மாப்போல்
வழங்கின்றார் முத்தையா வாழ்க அவர்
தொண்டென்று வாழ்த்து வீரே

'திருச்செந்தி லாதிபன்' என் திருப்பெயரால்
அமைந்துள்ள இந்த நூலை
திரட்டுப்பால் என்பேனோ? செழுந்தேனென்
றுரைப்பேனோ? தெவிட்டி டாத
பெருகுசுவை ஆரமுதம் என்பேனோ
அஞ்ஞானப் பிணியைத் தீர்க்கும்
அருமருந்து என்பேனோ? வம்மின் இவண்
உலகத்தீர் அருந்து தற்கே!



தமிழ்நாடு கலை இலக்கியப்பெருமன்றம் சார்பில் 26-2-94 உ நடைபெற்ற பாரதிவிழாவில் பாரதி சிந்தனைக்கு முதன்முதலாக வழிகாட்டிய வ முத்தையா செட்டியாரைப் பாராட்டி பொன்னாடை அணிவித்தல்

உ

சிவமயம்



# திருச்செந்தூர்

"சூரமது கடந்து நீங்கிச் சோதி வேலுடைய வள்ளல்
விரிபுனல் சடிலத் தண்ணல்மேவு செங்குன்றூர் நோக்கிப்
பருமணி வயிரமுத்தம் பலவளம் பிறகு மாழித்
திரையெறி யலைவாயாகுஞ் செந்திமா நகரம் புக்கான்"

இவ்விதமாக முருகப்பெருமான் தேவர்களுடன் திருச்செந்தூர் வந்து தங்கினதாக கந்தபுராணம் விவரிக்கின்றது,

அலைவாய், செந்தில், செந்தூர், ஜயந்தி என்பன இதன் மறுபெயர்கள். ஆறுபடை வீடுகளில் இரண்டாவதாக நிற்பது, சுவாதிஷ்டான க்ஷேத்திரம்,

சங்க காலத்தில், கோயில் இருந்ததை அகநானூறு (266) கூறியுள்ளது. கடற்கரையை நோக்கி. கோயில் கிழக்கு முகமாகப் பார்த்த வாயிலுடன் இருந்திருக்கவேணும். இப்போது வாயில் கிழக்கு முகமாக இல்லை. கடல் அரிப்பால் சங்ககாலக் கோயில் அழிந்திருக்கிறது.

ஆயினும் பண்டைய மரபுப்படி கிழக்கு நோக்கி வாயில் இல்லாவிட்டாலும், செந்திலாண்டவன், நின்ற திருக்கோலமாக ஒரு திருமுகமும், அபயம், வரதம், பூ, ஜெபமாலை இவற்றை ஏந்திய நான்கு திருக்கரங்களையும் கொண்டு கிழக்கு நோக்கியவாறு காட்சி தருகிருன். குழந்தைமுகம், சுமார் நான்கு அடி உயரம். நைஷ்டிக பிரம்மச்சாரி. திருமணத்திற்கு முற்பட்ட ஞானக்கோலம்.

மூலவருக்குப் பின்ஞல் பஞ்சமூர்த்திகள் (ஐந்து சிவ-லிங்கங்கள்) எழுந்தருளியுள்ளார்கள், இந்தஇடம் ஒரு இருட்டறை இம்மூர்த்திகளை முருகன் வழிபட்டு வந்ததாக வரலாறு.

வள்ளி தெய்வானையுடன் அமர்ந்திருக்கும் ஆறுமுக நயினுராகிய உற்சவமூர்த்தி தெற்கு நோக்கி திருமுகம் கொண்டு அருள்கிறார். இவர்தான் பள்ளியறைக்குச் செல்பவர்.

ஸ்தல விநாயகர் - தூண்டு விநாயகர். உட்பிரகாரத்தில் கோயிலுக்குள் இருமருங்கும் வள்ளி நாயகிக்கும் தெய்வயானைக்கும் தனித்தனி ஆலயங்கள் உள்ளன.

கோயிலுக்குள் சந்தனமலையும் பல்லவர் காலத்து வெங்கிடாஜலபதி சந்நிதியும் அமைந்துள்ளன.

வடக்கே கடற்கரை ஓரத்தில் வள்ளி ஒளிந்துகொண்ட ஓர் அழகிய குகைக் கோயில் இருக்கிறது.

காலை 5.30 மணிக்கு விசுவருபதரிசனம், சுப்ரபாதம் துவஜஸ்தம்ப நமஸ்கார சேவையும் காலை 6, 10-30 இரவு 8-30 மணிக்கு அபிஷேகமும் தினசரி 9 காலபூஜையும் நடைபெறுகிறது.

மூலவர் சந்நிதியில் பன்னீர் இலை விபூதியும் சந்தனமும் ஸ்ரீ ஷண்முகர் சந்நிதியில் பன்னீர் இலை விபூதி மட்டிலும் பெருமாள் சந்நிதியில் தீர்த்தமும் துளசியும் வழங்கப்படுகின்றன.

காயத்ரி தேவி முருகப்பெருமானைக் குறித்துத்தவம், கிடந்து தன் 24 எழுத்துக்களும் 24 தீர்த்தங்களாக உற்பவித்-துள்ளார் என்று தலபுராணம் கூறும். இத்தீர்த்தங்கள் யாவும் ஆலயத்துக்கு வடக்கும் தெற்குமாக உள்ளன.

இத்திருக்கோயிலுக்கு முன்னுள்ள கடலுக்கு வதனுரம்ப தீர்த்தம் என்று பெயர். அதன் தெற்கில் 17வது ஸ்கந்த புஷ்கரணி

( நாழிக்கிணறு) தீர்த்தமாகும். கோவிலில் உள்ள புஷ்கரணி 24வது தீர்த்தமாகும்.

ஸ்கந்த புஷ்கரணி முருகனால் உண்டாக்கப்பட்டது. இந்த நாழிக்கிணறு ஷண்முக விலாஸ் மண்டபத்திற்கு தெற்கே பெரிய கிணற்றுக்கு அருகே உள்ளது. இது சிறிய கிணறு. ஒரு அடி சதுர அளவினதாகும். தெளிவான நல்ல நீர் உள்ளது. பெரிய கிணறு உப்பு நீர் உடையது. இது 14 சதுரஅடி கொண்டது பெரிய, சிறிய கிணறுகள் அருகருகே இருப்பினும் நல்ல நீர் உப்புநீருடன் கலப்பதில்லை. இது இயற்கையின் விந்தை, தெளிவான நல்ல நீருடைய கிணற்றின் ஆழம் 7 அடி ஆகும். இதில் வரம்பு வரையில் எந்த நேரமும் நீர் நிறைந்திருக்கும், நீரை எடுக்க எடுக்க மீண்டும் மீண்டும் நிறைந்து கொண்டே இருக்கும். நீரை எடுக்காமல் இருந்தாலும் நீர் ஊறி வடிவதில்லை.

அலைவாயிலில் கந்தமாதன பருவதத்தைக் குடைந்து இக்கோயில் கட்டப்பெற்றதாகத் தொன்மை இலக்கியம் பேசுகிறது. கந்தமாதன பருவதம் நுரை மணற்கல் மலையாகும்.

இப்போது கருங்கற்பணியாகப் புதுப்பிக்கப் பெற்றுள்ளது. ஓங்கார வடிவத்தில் அமைந்துள்ளது. ராஜகோபுரம் ஒன்பது நிலைகளையுடையது. 137 அடி உயரம்.

ஊரின் நடுவே நாயக்க மன்னர் ஆட்சியில் திருப்பணி செய்யப் பெற்ற உருவிலும் அமைப்பிலும் சிறந்த, பெரிய மண்டபங்களையுடைய சிவக்கொழுந்தீச்சுரர் ஆலயம் இருக்கிறது,

17ம் நூற்றாண்டில் டச்சுக் கொள்ளைக்காரர்கள் ஷண்முகப் பெருமான் மூர்த்தத்தை களவு செய்து கப்பலில் கொண்டு சென்ற போது கடல் கொந்தளிப்பு ஏற்பட்டதால் நடுக்கடலில் மூர்த்தத்தை தூக்கிப் போட்டுவிட்டு போய்விட்டார்கள். திருநெல்வேலி வேளாள மரபினரான புலவர் ஸ்ரீ வடமலையப்பன் கனவில் ஸ்ரீ ஷண்முகப் பெருமான் தோன்றி கோயிலின் கிழக்கு வாயிலின் நேரே அமைந்துள்ள வதனாரம்பக் கட்டிடத்தைக் காட்டி, அதற்கு நேரேயுள்ள கடலில், சிறிது தொலைவில் ஒரு பாறையின் மீது, தான்படிந்து கிடப்பதையும், அதற்கு நேர் கடல் அலைமீது எலும்மிச்சம்பழ மாலை ஒன்று மிதப்பதையும், அதற்கு மேல் விண்ணில் இரண்டு கருடர்கள் வட்டமிடுவதையும் காட்டி அங்கு வந்து தன்னை எடுத்து கோயிலுள் எழுந்தருளச் செய்யுமாறு கூறி மறைந்தருளினார்.

கனவு தெளிந்த மலையப்பர் திருவருளை நினைந்து கண்ணீர் மல்கி திசையை நோக்கித் தொழுது, திருச்செந்தூர் வந்து பரிவாரங்களுடன் படகுகளில் புறப்பட்டு கிழக்கு நோக்கிச் சிறிது தூரம் சென்றவுடன், எலுமிச்சம்பழ மாலை மிதந்து கொண்டிருந்ததையும் கருடபகவான் வானத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்ததையும் கண்டவுடன், ஓடக்காரர்களை கடலில் மூழ்கி தேடச்செய்து கிடைக்காததால், பிள்ளையன் அவர்களே கடலில் குதித்துத் தேடினார். ஒரு திருவுருவம் தட்டுப்பட, அதனை தண்ணீருக்கு மேல் எடுத்தனர். அது நடராஜ மூர்த்தியாக இருந்தது. இது திருநள்ளாற்றில் திருடப்பட்டது. மீண்டும் கடலில் மூழ்கி ஷண்முகப் பெருமான் திருவுருவம் எடுக்கப்பட்டு, கரைக்கு கொண்டு வந்து சேர்த்தனர். இந்த இருமூர்த்தங்களையும் கொல்லம் ஆண்டு 829 தை மாதம் 29ம் தேதி (கி. பி. 1653) கோயிலில் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்தனர், திருவுருவம் கடலிலிருந்து எடுக்கப்பட்டது. தை மாதம் புனர்பூச நக்ஷத்திரத்தன்று. மாசிப் பெருவிழாவில் ஏழாம் நாள் புனர்பூசம் கூடிய நன்னாளில் ஆறுமுகப் பெருமானை எழுந்தருளப் புரிந்து ஷண்முக விலாசத்தில் இருத்தி அபிஷேக ஆராதனை செய்து வெட்டிவேர் விமானத்தில் எழுந்தருளச்செய்து மேளதாளங்களுடன் தூண்டிவிநாயகர் கோவிலுக்கருகில் உள்ள 'பிள்ளையன் பிள்ளையவர்களின் மண்டபத்தில் எழுந்தருளச் செய்து, அன்று பகல் முழுவதும் இருந்து அடியவர்களுக்கு அருள்புரிந்தார்.

ஆவணித்திருநாள் ஏழாம் நாளில் சுவாமி ஊர் முழுவதும் வலம்வரும்போது ஷண்முகர் திருவுருவத்தை முன்பக்கம் பார்த்தால் சுப்பிரமணியர் போலவும் பின்புறமிருந்து பார்த்தால் நடராஜர் ஆகவும் காட்சி தரும்

கடலினின்று ஆறுமுகப் பெருமான் கரையேற்றப்பட்ட செய்தியை அறிவிக்கின்ற சிலாசாசனமும், திருச்செந்தூர் பிள்ளையன் மண்டபத்தில் உண்டு

'ஞானபூமி' ஆன்மீக மாத இதழிலிருந்து

அர்த்தஜாம பூஜை முடிந்ததும் ஆறுமுகப்பெருமான் சந்நிதியிலிருந்து, வள்ளியம்மையின் சந்நிதிக்குச் சென்றதும்,

பாகவதர், சுவாமிக்கும் அம்மனுக்கும் "இந்திராதி தேவரெல்லாம் இன்பமுடன் கானம் செய்ய சுந்தரம் சேர் வள்ளியுடன் சுப்பிர மணியர் நலங்கிடவே... என்று நலங்கு பாடியதும் சுவாமியை ஸ்தலத்தார் பல்லக்கிலிருந்து இறக்கி,பள்ளியறைக்கு இட்டுச்செல்ல வள்ளியம்மையும் பள்ளியறைக்கு வருகிருர். இருவரும் பள்ளியறை ஊஞ்சலில் சேருகிறார்கள். சிற்றுண்டிகளாக பால்கோவா, சுசியன் வடை, சர்க்கரைப் பொங்கல், கற்கண்டு, பேரீட்சம் பழம், பால்-பழம் ஆகியவைபள்ளியறைக்குள் நைவேத்யம் செய்துவைக்கப்படுகின்றன சுவாமியின் அன்றையசெலவினங்களுக்கு கோயில் சிப்பந்திகணக்கு சொல்ல சுவாமி மவுனமாக கேட்டுக்கொண்டிருப்பதைத்தொடர்ந்து பாகவதர் ஊஞ்சல் பாடுகிறார்,

'வைரமணி மரகதத்தால் கால்கள் நாட்டி,
வைர கோமேதகத்தால் விட்டம் பூட்டி,
பச்சை வைடூரியத்தால் பலகை சேர்த்து
பசும்பொன் சங்கிலியால் வடங்கள் கோர்த்து
பரிந்து விஸ்வகர்மன் செய்த ஊஞ்சலேறி
பாவை குறவள்ளியுடன் பன்னிருகை வேலவரும்
ஆடிர் ஊஞ்சல்

ஸ்தலத்தாரும் பட்டரும் ஊஞ்சல் ஆட்டிவிட சுவாமியும் வள்ளி யம்மையும் ஊஞ்சல் ஆடுகிருர்கள்—சந்நிதி மூடப்படுகிறது.

சுவாமியோடு கலந்து உலக வாழ்க்கைத் தத்துவத்தை உணர்த்தும் 'இச்சாசக்தி, வள்ளியம்மைதான்! ஆனதால் வள்ளி யம்மையின் பள்ளியறைக்குத்தான் செல்கிருர். ஆனல் கந்தசஷ்டி யையொட்டி சூரம்சம்ஹாரம் முடித்துதெய்வானைப்பிராட்டியை மணந்த கோலத்தில் நான்கு நாட்கள் மட்டும் சுவாமி தெய்வானையுடன் ஊஞ்சல் கொண்டிருப்பார்.

மூலவரான பாலசுப்பிரமணிய சுவாமி, பிள்ளைக் கோலத்தி லிருக்கும் நைஷ்டிக பிரம்ச்சாரி: திருமணத்திற்கு முற்பட்ட ஞானக் கோலம்;உற்சவரான ஆறுமுகப்பெருமான்தான் வள்ளி,தெய்வயானை யுடன் அமர்ந்திருக்கிருர். பள்ளியறை செல்பவரும் உற்சவரான ஷண்முகர்தான்.

மறுநாள் உஷத்காலத்தில் வள்ளியம்மை சந்நிதியில் தரிசன-மூர்த்திகள் சபாவினர், சுப்ரமண்யர் சுப்ரபாதத்தை பாடி பெருமானை திருப்பள்ளி எழுச்சி செய்கிறார்கள் அந்த சுப்ரபாதத்தில் ஒரு ஸ்லோகத்தின் விளக்கம் இது.

'ஹே முருகா ஸ்கந்தபுஷ் கரணியில் ஸ்நானம் செய்து, விபூதி உருத்திராட்சம் அணிந்தவர்களாய் உன்பக்தர்கள் காத்திருக்கிறார்கள் நீ துயிலெழுவாய்'

அம்மன் சுவாமிதுயிலெழுந்ததும் பொரி நைவேத்தியம் வைத்து பஞ்சவத்தி தீபாராதனை நடக்கிறது. அம்மன் திருவுருவத்தை பட்டர் அம்மன் சன்னதிக்கு கொண்டு போகிறார் சுவாமி பாத வடிவத்தில் பல்லக்கில் புறப்பட்டு முறைக்காரர்கள் செங்கோல், வாள் ஏந்தி வர, பக்தர்கள் வெஞ்சாமரம் வீச சுவாமி பிரதட்சனமாக சுற்றுலா வருகிறார். சொர்ண துவஜஸ்தம்பத்தை கடந்து உள்ளே மகா மண்டபத்து வழியாக நேராக சண்முகப்பெருமாள் சந்நிதிக்கு செல்கிறார். உடனே மூலவர் சந்நிதியில் விசுபருபதரிசனம் என்னும் நிர்மால்ய பூஜை நடக்கிறது. அதன் பொருள்: சண்முகப்பெருமாள் சந்நிதிக்குள் சுவாமி சென்றதுமே அவர் மூலஸ்தானத்துக்குள்ளும் சென்று விட்டதாக ஐதீகமாம். அதனால் மூலஸ்தானத்தில் பூஜை நடக்கிறது.

இந்தக் கோயிலில் மிக முக்கியமான பூஜை வேளை, இந்த விசுபருபதரிசனம் என்ற நிர்மால்ய பூஜைதானும்.



# செந்தில் பன்னீர் இலை விபூதி மகிமை

சுப்பிரமணியருடைய பெருமையைப் போதிக்கின்ற சகலவேதங்களும் ஒன்றுசேர்ந்து செந்திலாண்டவனுடைய மகிமையைவிளக்கபன்னீர் மரங்களாக இத்தலத்தில் தோற்றம் கொண்டன.

இலையில்காணப்படும் 12நரம்புகளும் முருகனது பன்னிரெண்டுதிருக் கரங்களையும் நினைவு படுத்துவது செந்திலில் வேதங்களே பன்னீர் மரங்களாகத் தோன்றி விளங்குவதால், பன்னீர் இலையும் வேத மந்திரசக்தியைப்பெற்று தன்னுடன்சம்மந்தப்படும், திருநீரும் வேத மந்திர சக்தியைப் பெறும்படி செய்கிறது.

விசாகனுக்கு, விபூதி அபிஷேகம் செய்து அந்த விபூதியை பன்னீர் இலையில் வைப்பதால் அந்த விபூதியும் வேதமந்திர சக்தியைப் பெறுகிறது.

# திருநீறு - விபூதி

சிவபெருமானை வழிபடும் சைவசமயத்தார் பசுவின் சாணத்தை அக்கினியால் சுடுதலினால் உண்டாகிய வெண்மை நிற விபூதியைப் பட்டுப் பையிலேனும் சம்புடத்திலேனும் எடுத்து வைத்துக்கொண்டு வடக்கு அல்லது கிழக்கு முகமாக இருந்து கொண்டு நிலத்திலே சிந்தா வண்ணம் அண்ணாந்து 'சிவ சிவ' என்று சொல்லி வலதுகை நடுவிரல்கள் மூன்றினாலும் நெற்றியிலே உத்தூளனமாக [தூளாக] வரியின்றி பூசுதல் வேண்டும்,

இரவில் நித்திரை போகும் போதும் காலை எழுந்தவுடனும் பல் துலக்கி முகம் கைகால் கழுவியவுடனும் சூரியன் உதயமாகும் போதும் அஸ்தமிக்கும் போதும் ஸ்நானம் செய்தவுடனுர் உணவுஉண்பதற்கு முன்பும் பின்னும் விபூதியை பூசிக் கொள்ளவேண்டும்.

தீட்சை உபதேசம் பெற்றவர்கள் சிரம், நெற்றி, மார்பு, கொப்பூழ், இரு முழந்தால்கள், இரண்டு முழங்கைகள், இரண்டு புயங்கள், இரண்டுமணிக்கட்டுகள் இருவிலாப்புறங்கள், முதுகு, கழுத்துஎன்னும் பதினாறு இடங்களில் நீரில்குழைத்து [திரிபுண்டரம்] விபூதியை மூவரியாக அணிதல் வேண்டும்.

விபூதி – கற்பம், அநுகற்பம் உபகற்பம் என மூவகைப்படும்.

அண்ணல்மெய் வடிவாங் கற்பம் அநுகற்பம் உபகற்பம் மென் (று)
எண்ணுமூ வகைத்தாம பூதி யெளிதினெப் பவமுந் தீர்த்தே
நண்ணுற விசையின் ஈசன் நறுமலர்ப் பதம் நினைக்கப்
பண்ணியே பத்தி முத்திப் பயன் நல்கும், பெயர் நினைந்தே

உபதேச காண்டம்

பூதி-பவம் தீர்த்தே ஈசன்பதம் நினைக்கப் பண்ணியே பயன் நல்கும்,

விபூதியானது மருந்தாகவும் உட்கொள்ளும் சிறப்புடையது விதிப்படி, அமைந்த திருநீற்றை உட்கொண்டால், உடம்பின் அசுந்தங்களைப் போக்கி எழுபத்தீராயிரம் நாடிகளுக்கும்வலிமையை உண்டாக்கும், வாதம், பித்தம், கபம் நோய்களை நீக்கும்.

உபவேதத்துள் ஒன்றாகிய ஆயுள்வேதம் திருநீற்றைப் பூசும் மருந்தாகவும் புசிக்கும் மருந்தாகவும் வியந்து கூறியுள்ளது.

சைவ சமய சாதனங்கள், திருநீறு, உருத்திராக்கம் ஐந்தெழுத்து

-நீறில்லா நெற்றி பாழ்

# உருத்திராட்சம்

சிவ சின்னங்களுள் ஒன்று ருத்திராக்ஷம். ருத்திர + அக்ஷம் என்ற சொற்கள் தீர்க்க சந்தியாய் இணைந்து ருத்திராக்ஷம் என ஆயிற்று. அக்ஷம், கண்டி, கண்டிகை, கண்மணி எனப்பெயர்களும் உண்டு. ருத்திராக்ஷம்-ருத்திரனது கண் என்பது பொருள் அக்ஷம் என்ருல் கண். திருக்கயிலாசபதியினுடைய சூரியவடிவமாகிய வலக்கண், சந்திர வடிவமாகிய இடக்கண், அக்கினிவடிவமாகிய நெற்றிக்கண் மூன்றிலிருந்தும் பொழிந்த நீரிற்றோன்றிய மணி.

உருத்திராக்ஷங்கள் இடக்கண்ணிலிருந்து வெண்ணிறமாகவும் வலக்கண்ணிலிருந்து கபில நிறமாகவும், நெற்றிக்கண்ணிலிருந்து கருநிறமாகவும் தோன்றின. வலக்கண்ணிலிருந்து தோன்றிய கபிலநிறத்திலிருந்து முறையே செந்நிற, பொன்னிற உருத்திராக்ஷங்களும் தோன்றின.

வெண்ணிறம், கபிலநிறம், செந்நிறம், பொன்நிறப், கருநிறம். என உருத்திராக்ஷம் ஐந்து வகைப்படும். ஒரு முகம் முதல் பதினாறு முக மணிவரை உள்ளனவாம்.

ஒருமுகம், ஐந்துமுகம், பதிஞேறுமுகம், பதிஞன்குமுகம், உள்ள மணிகள் பூஜிப்பதற்கு மிகவும் சிறந்தவை. 108 - 54 - 27 என்னும் எண்ணிக்கையில் ஒரேவிதமான முகங்களுடைய மணிகளாக உருத்திராக்ஷ மாலைகள் அமைக்க வேண்டும். நாயகமணியும் அமைக்க வேணும் ஜபமாலையைஜபிப்போர், நாயகமணியை எண்ணிக்கையில் சேர்க்காமல் ஜெபிக்க வேணும், நாயக மணியைக் கடந்து ஜபித்தல் பாவம். ஜபமாலை மணிகள் ஒன்றோடொன்று உரசி ஓசை ஏற்படாது ஜபிக்க வேண்டும். குடுமி, தலை, கழுத்து, காதுகள், மார்பு, கைகள், புயங்கள் ஆகிய பத்து அங்கங்களில் தரித்துக் கொள்ளவேணும்.

பேய், பிசாசு, பூதம் நோய் வருந்தமாட்டா. நீராடும்போது உருத்திராக்ஷத்தின் மீதுபடும் நீர், உடம்பில் படுவதால் நன்மை உண்டாகும். தீராத காய்சலுக்கு உருத்திராக்ஷத்தை தேனில் குழைத்துக் கொடுத்து குணப்படுத்துவர். மணியை தண்ணீரில் போட்டு அதுமூழ்கினுல் சிறப்பானதுஎன்றும் மிதந்தால் பத்ரொட்சம் (ஒரு கொட்டை) என்றும் அறியலாம்.

சயனம். மலசலமோசனம், புணர்ச்சி, நோய், சனனுசௌசம் மரணாசௌசம் இந்த ஆறுகாலங்களின் போது உருத்திராட்க்ஷம் தரிக்கலாகாது.

அக்க மாணிவேய்ந் திடிற்பிணிகள் அனைத்தும் அகலும் வசீகரமாம்
மிக்க கொடும்பா தகந்தவிர்க்கும் மேலும் மேலும் உத்தமாம்
கக்கு கனற்பா ரிடங்குணபங் கழுது புயங்கக் கடிவருந்தா(து)
இக்கு மொழியாய் எனவுரைத் தொன்றீந்தாள் அக்கமா மணியே-

— உபதேசகாண்டம்

புயங்கம்-பாம்பு, பாரிடம்-பூதம், கழுது-பேய், குணபம்-சுடு காட்டில் உள்ள பிசாசு, இக்கு-கரும்பு



# தேவகோட்டை - திருச்செந்தூர்
# சர்க்கரைக் காவடி

பிங்கள ஞு (1977) முதல் வருடந்தோறும் சித்திரை மீ வேல் காவடி எடுத்துக்கொண்டு பாதயாத்திரையாகப் புறப்பட்டு காளையார் கோவில் பரமக்குடி- கீழத்தூவல், முதுகளத்தூர், கடலாடி, சாயல்குடி வேம்பார் வைப்பார் - தூத்துக்குடி ஆத்தூர் வழியாக 8வது நாள் திருச்செந்தூரை அடைந்து சித்திரா பௌர்ணமியன்று காவடிகளைச் செலுத்தியும் பால்குடங்கள் எடுத்து அபிஷேகம் செய்தும் வழிபாடு கள் நடத்தி, தெரிசனம் செய்து வரப்படுகிறது.



உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பின் உத்தமனைக் காண் - ஔவையார் குறள்

# ஓங்கார ஒலி

அ. என்பது முதல் ஒலி; வாயைத் திறந்தவுடன் எழும் ஒலி; ஒலிகட்கெல்லாம் தாயாகவும் தந்தையாகவும் உள்ள ஒலி; அடிப்படையான ஒலி.

உ என்பது அடுத்த ஒலி ; இஃது உயிர் ஒலி; எல்லா மொழிகளிலும் உள்ள உயிர் ஒலி. அகர ஒலியும் உகர ஒலியும் இணையும் பொழுது ஓகார ஒலி பிறக்கிறது. அ+உ = ஓ, ஓங்காரமும் ம் ஒலியும் சேர்ந்தே ஓங்கார ஒலி. ஓங்கார ஒலி உயர்த்துவதைக் குறிக்கும். ஓ ... எனத் 'தொடர்ச்சியாகச் சொல்லிப்பாருங்கள். சிந்தனையில்தெளிவுஏற்படும்:உள்ளத்தில் அமைதி ஏற்படும்.

ஓங்கார ஒலி உயிர்க்குற்றங்களை அகற்றுகிறது. இறைவன் அடியில் ஆன்மாவைச் சேர்ப்பிக்கின்றது,

ஓங்காரம் இறைவனை உணர்த்தும் ஒலி. ஓம் என்ற சொல் இறைவனை உணர்த்தும் சொல்.

ஓம் என்ற சொல்லில் அகர ஒலி உண்டு. உகர ஒலி உண்டு மகர ஒலி உண்டு.

ஓம் என்பது பிரணவம். இந்தப் பிரணவமே வேதத்தின் மூலம்

ஓம் என்ற ஒலியின் வடிவமே பிள்ளையார். ஓங்கார வடிவானவர் பிள்ளையார்.

நூல்: பிள்ளையார் வழிபாடு; வெளியீடு: காந்தளகம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னபலவன்
ஞானகுரு வாணியையுள நாடு.

– ஸ்ரீ சேஷாத்திரி சிவனார்

சிவமயம்

# குரு வணக்கம்

ஸ்ரீலஸ்ரீ ஈசான சிவாச்சார்ய சுவாமிகள் தோத்திரம்

நீறருத் திருமேனி நெஞ்சரு
அஞ்செழுத்து நிமலன் பூசைச்
சாறருத் தினப்பணிகள்
தடையருக் கருணைவிழி சாரும் இன்சொல்
பேறருச் சைவநெறி பெட்பருப் பஞ்சகச்சம் பிறங்கு முந்நூல்
வீறரு அக்கமணி மினிரும் ஈசானகுரு விரைத்தாள் போற்றி

(புலவர்மணி சோமசுந்தரஞ் செட்டியார்)

## ஓம் ஓங்கார கணபதியே நம :

ஜெயகணேச ஜெயகணேச ஜெயகணேச பாஹிமாம்
ஜெயகணேச ஜெயகணேச ஜெயகணேச ரக்ஷமாம்
ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேசா பாஹிமாம
ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ரக்ஷமாம்
ஜெயகணேச ஜெயகணேச ஜெயகணேச பாஹிமாம்
ஜெயகணேச 'ஜெயகணேச ஜெயகணேச ரக்ஷமாம்

"நாதன் நாமம் ஓம் நமசிவாயநம:
"சூட்சும பஞ்சாட்சரம் ஓம் சிவாய நம"
"அதிசூட்சும பஞ்சாட்சரம் ஓம் சிவய சிவ"

## ஜெபம்

சிவசிவ சிவசிவ சிவாயநம
ஹரஹர ஹரஹர நமசிவாய:
சிவாய நமஓம் சிவாய நம
சிவசிவ சிவசிவ சிவாய நம
ஹரஹர ஹரஹர நமசிவாய:

## ஸுப்ரஹ் மண்ய த்யானம்

யோகநாத ஸிரச்ரேஷ்ட
ஸர்வக்ஞ கருணாகரா
ஷண்முகஸ்ய பரம்ஸ்தோத்திரம்
பாவனம் பாபநாசனம்

# காயத்திரீ ஜபம்

மைலாப்பூர் பேராசிரியர் டாக்டர் சு. விசுவநாதசிவாச்சாரியார் M..A: Phd.,

ஓம் பூ: தத்ஸ விதுர்வரேண்யம்
ஓம் புவ: பர்கோ தேவஸ்ய தீமஹி
ஓம் ஸிவ: தியோ யோந: ப்ரசோதயாத்

'ஓம் பூர்ப்புவஸ் ஸிவ, என்ற வியாஹிருதியுடன் கூடியது காயத்ரீ எனவும் அது சேராத இருபத்திநாலு அக்ஷரம் மட்டும் ஸர்கவித் எனவும் கூறப்படும்.

ஓம் பூ தத்ஸ விதுர்வரேண்யம்
பர்கோதேவஸ்ய தீமஹி
ஓம் புவ: தியோ யோந: ப்ரசோதயாத்

ஓம் ஸிவ; தத்ஸ விதுர்வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோந: ப்ரசோதயாத்

## ஸ்கந்த காயத்ரீ ஜபம்

ஓம் கார்த்தி கேயாய வித்மஹே
சக்தி ஹஸ்தாய தீமஹி
தந்நஸ்கந்த; பிரசோதயாத்

ஷடாக்ஷரம் : ஓம் சரவணபவ ஹ்ரீம்.

மந்திரம்:

ஓம் ஹ்ரீம் ஸ்ரீம்க்லீம் ஜும்வம்யம் ஸர்வலோகம்-மே-வச மாநய ஷண்முகாய மயூரவாஹநாய ஸர்வ ராஜபயவிநாசநாய ஸர்வ தேவ சேனாபதயே ஸர்வசத்ரும்-நாசய நாசய ஸுப்ரமண்யாய ஸ்வாஹா, ஓம், ஸம், கம், விம், யம், க்ஷௌம்ஸ்கந்தேஸ்வராய நம. அக்கினிக்கு ஏழு நாக்குகள்: காளி, கராளீ, மனோஜலா, ஸுலோ, ஹிதா, ஸீதூம்ரவர்ணா, ஸ்புலிங்கினி, விச்வருசீ.

ஏழு ரிஷிகள்: அத்ரி, ப்ருகு, குத்ஸ, வசிஷ்ட, கௌதம், காச்யப அங்கிரஸ்.

ஏழு பிரியமான இடங்கள்: ஆவஹனீயம், கார்ஹபத்யம், தக்ஷிணாக்னி, ஸப்யம் அவஸத்யம், ப்ரஜாஹிதம், ஆக்னித்ரயம் என ஏழு அக்னிகளுக்குரிய இடங்கள்

யாகங்கள் ஏழு: அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம் ஷோடசி, அதிராத்ரம், அப்தோர்யாமம், வாஜபேயம்.

உ

சிவமயம்



# காணாபத்யம்

(கணபதி சமயம்)

## கணபதி, காயத்திரி

ஓம் தத்புருஷாய வித்மஹே
வக்ர துண்டாய தீமஹி
தந்தோ தந்தி பிரசோத்யாத

## தியான சுலோகம்

சுக்லாம் பரதரம் விஷ்னும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்
பிரசன்ன வதனம் த்யாயோத சர்விக்னோபசாந்தயே

மூஷிக வாஹண மோதக ஹஸ்த
சாமர கர்ண விளம்பித ஸூத்ர
வாமன ரூப மஹேஸ்வர புத்ர
விக்ன விநாயக பாத நமஸ்தே

அருள்வாய் உன்னையே அனுதினம் பணிவேன்
அன்னை பராசக்தி அருள் மகனே
திருமால் மருகா திருவடி சரணம்
தீன ரக்ஷகனே கண நாதா

1104



ஒளியான திருமேனி உமிழதானம் மிகமேவு
களி ஆர வரும் யானை கழல் நாளும் மறவாமல்
அளி ஆளும் மலர் தூவும் அடியார்கள் உளமான
வெளி ஆகும் வலிது ஆய வினை கூட நினையாவே

பிள்ளையாரின் திருவடிகளை மறவாமல் மலர்களைத்
தூவி வழிபடுகின்ற அடியவரது உளத்தின்
கண் ஆணவ இருள் நீங்கி மெய்யுணர்வு விளங்கும்

## விநாயகர் காப்பு

ஒங்கார வடிவான உன்பாத தாமரையும்
உபயபரிபுர மறைகளும்
உதிக்கின்ற செங்கதிர்க ளொருகோடி நிகரொளியும்
உத்தூள நீற்றினொளியும்
பாங்கார் கஜாநநமும் உபயகரமும் வளர்புயப்
பவளாசலங்கணான்கும்
பாசமுட னங்குசங் கொம்பேரி லட்டுகம்
பட்சமொடு வைத்தகரமும்
நீங்காத அருண்மாரி பொழியுந்த்ரி யம்பகமும்
நிறையுமும் மதமாரியும்
நீள்சடா டவியும் வெண்பிறையு மொரு தொந்தியும்
நெஞ்சிலொரு காலும் மறவேள்
காங்கேயன் மகிழ்தமையனே கங்கை நதிபெருகு
காசிவாழ் துண்டிராச
கணபதியெனும் பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே,

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே

பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்
துங்கக்கரிமுகத்துத் தூமணியெ நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா

என்னை நினைந்தடிமை கொண்டு என் இடர்கெடுத்தூர்
தன்னை நினையத் தருகின்றான் - புன்னை
விரசு மகிழ் சோலையியன் நாறையூர் முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான்

கணங்கொண்ட வல்வினைகள் கண்கொண்ட நெற்றிப்
பணங்கொண்ட பாந்தட் சடைமேல் - மணங்கொண்ட
தாதகத்த தேன்முரலுங் கொன்றையான் தந்தளித்த
போதகத்தின் தாள் பணியம் போம் (கபிலர்)

சூர் தந்த பொற்குவட்டின சூளிகையின் வானயிரத்து
வார்தந் தெழுமதியம் மன்னுமே சீர் தந்த
மாமதலை வான்மதியங் கொம்பு, வயிறுதித்த
கோமதலை வாண்மதியங் கொம்பு. (அதிராவடிகள்)

ஓம் எனும் பொருளாய் உள்ளோய் போற்றி
பூமனும் பொருள் தொறும் பொலிவாய் போற்றி
அகரம் முதலென ஆனாய் போற்றி
அகர உகர ஆதி போற்றி

தவமே புரியும் வகை யறியேன்
சலியா துற நெஞ்சறியாது
சிவமே நாடிப் பொழுதனைத்துந்
தியங்கித் தியங்கி நிற்பேனை
நவமா மணிகள் புனைந்த முடி
நாதா, கருணா லயனேதத்
துவமாகிய தோர் பிரணவமே
அஞ்சேல் என்று சொல்லுதியே – பாரதியார்.

தடந்தாட்டு ஒத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சை பாம்பொடு மிளிற
வெனறாடு திருத்தாதை வியந்து கை துடிகொட்ட
நின்றாடு மழ களிற்றை நினைவாரே வினையிலரே

மன்றிலே நின்று வெற்றிக் கூத்தாடும் சிவபெருமான், மகனுடைய நின்றாடும் நடனத்தை வியந்து அதற்கேற்றவாறு கையிலுள்ள உடுக்கையை முழக்கினார். அந்த நின்றாடும் விநாயகரை நினைப்பவர்களுக்கு வினை இல்லை என்றவாறு

(தொல்காப்பியம்)

# கற்பக விநாயகர் வணக்கம்

கங்கையென அருள்பொழியும் கருணை போற்றி!
கரத்தினிலே சிவலிங்கக் காட்சி போற்றி!
மங்கலமசேர் ஓங்கார வடிவே போற்றி!
மலைக்கல்லில் வடிவெடுத்த மணியே போற்றி!
சங்கநிதி பதுமநிதி அனைய செல்வம்
தனையடைந்த சான்றோர்க்குத் தருவாய் போற்றி!
அங்கையற்கண் ணம்மைதவ மைந்தா போற்றி!
அருள்பொழிகற் பகப்பெருமான் அடிகள் போற்றி!

கல்லைக் குடைந்தமைத்த கற்பகமே! என்னெஞ்சக
கல்லில் உனதுருவைக் காட்டாயோ? - சொல்லரிய
பிள்ளையார் பட்டிப் பெருங்கோயில் கொண்டருளும்
வள்ளால் என்னைக்காக்க வா.

சொ. சொ. மீ. சுந்தரம்

திருவும், குலமும், எழில்நலனும்
திகழ்நற் குணனும் சிறப்பு எவையும்
மருவு மகளிர் மன்றலும், நன்
மக்கட் பேறும், வளர்க்கல்விப்
பொருளும், தெருளும், மெய்ஞ்ஞானப்
பொலிவும் மருதங் கூர்வாழ
வருகற் பகப்பேர் அண்ணல்கழல்
வணங்க நியமம் வழங்கிடுமே.

– சொக்கலிங்க ஐயா

பெருவரங்கள் தரும்தேசி விநாயகப்
பிள்ளையார் பாதம் பணிந்து,
திருவிங்கைக் குடிமகா தேவர் அவர்
திருத்தாள்கள் வணங்கி, மேலும்
அருள்மருதங் குடிநாய னார்அவர்தம்
அடிமலர்கள் சேவித்து, என்றும்
மருள்கடிந்து சிவகாமி யொடுவாடா
மலர்மங்கை அருள் கொள் வோமே.

– சா. கணேசன்

சிவமயம்



# சைவம்

(சிவசாயம்)

# முதல் மூன்று திருமுறைகள்

## திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்

### சீர்காழி

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசியென்னுள்ளங்கவர் கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடையபிர மாபுரமெவிய பெம்மானிவனன்றே

### கலம்பையங் கோட்டூர்

பாலனும் விருத்தனும் பசுபதி தானும்
பண்டுவெங் கூற்றுதைத் தடியவர்க்கருளும்
காலனும் எனதுரை தனதுரை யாகக்
கனலெரி அங்கையில் ஏந்திய கடவுள்
நீலமா மலர்ச்சுனை வண்டுபண் செய்ய
நீர்மலர்க் குவளைகள் தாதுவிண் டேரங்கும்
ஏலம்நாறும் பொழில் இலம்பையங் கோட்டூர்
இருக்கையாய் பேணியென் எழில் கொள்வதியல்பே

### திருவாலவாய்

வீடலால வாயிலாய் விழுமியர கணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே

## திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும்

அங்கமும வேதமும் ஓது நாவர்
அந்தணர் நாளும் அடிபரவ
மங்குல் மதிதவழ் மாட வீதி
மருகல் நிலாவியமைந்த சொல்லாய்
செங்கய லார்புனந் செல்வமல்கு
சீர் கொள்செங் காட்டங் குடியதனுள்
கங்குல் விளங்கெரி யேந்தியாடுங்
கணபதி யீச்சரங் காமுறவே

## திருநின்றியூர்

அச்சம் இலர், பாவம் இலர் கேடும் இலர் அடியார்
நிச்சம்உறு நோயும் இலர் தாமும்நின்றி யூரில்
நச்சம்மிட றுடையார் நறுங்கொன்றை நயந்தாளும்
பச்சம் உடை அடிகள் திருப்பாதம் பணிவாறே

## திருநெய்த்தானம்

மையாடிய கண்டன்மலை மகள்பாகம துடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடிய வொருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவ ளோடும்
நெய்யாடிய பெருமானிடம் நெய்த்தான மெனீரே

## திருத்தூங்கானைமாடம்

சாநாளும் வாழ்நாளுந் தோற்றமிவை
சலிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
ஆமா றறியா தலமந்துநீர்
அயர்ந்தும் குறைவில்லை ஆனேறுடைப்
பூமான் அலங்கல் இலங்கு கொன்றை
புனல் பொதிந்த புன்சடையி னுன்உறையும்
தூமாண் கடந்தைக் தடங்கோயில் சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே

## திருநள்ளாறு

விளங்கிழை மடந்தைமலை மங்கையொரு பாகத்
துளங்கொள விருந்திய ஒருத்தனிட மென்பர்
வளங்கெழுவு தீபமொடு தூபம் மலர் தூவி
நளங்கெழுவி நாளும்வழி பாடுசெய் நள்ளாறே.

## திருத்தோணிபுரம்

சிறையாரும் மடக்கிளியே இங்கேவர் தேனொடுபால்
முறையாலே உணத்தருவேன் மொய்பவளத் தொடுதரளந்
துறையாருங் கடல்தோணி புரத்தீசன் துளங்கும் இளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொரு காற் பேசாயே

## திருவாரூர்

தந்தையார் போயினர்; தாயாரும் போயினர்;
தாமும் போவார்;
கொந்தவேல் கொண்டு ஒரு கூற்றத்தார் பார்க்கினரூர்
கொண்டு போவார்;
எந்த நாள் வாழ்வதற் கேமனம் வைத்தியால்
ஏழை நெஞ்சே!
அந்தண் ஆரூர் தொழுது உய்யலாம்; மையல்கொண்டு
அஞ்சல் நெஞ்சே

## திருக்கோளிலி

நாளாய போகாமே நஞ்சணியும் கண்டனுக்கே
ஆளாய அன்புசெய்வோம் மடநெஞ்சே அரன்நாமம்
கேளாய் நம் கிளைகிளைக்கும் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே

## வலிவலம்

ஒல்லை ஆறி உள்ளம் ஒன்றிக் கள்ளம் ஒழிந்து வெய்ய
சொல்லை, ஆறித் தூய்மை செய்து காம வினை அகற்றி
நல்ல வாறே உன்றன் நாமம் நாவில் நவின்றேத்த
வல்லவாறே வந்து நல்காய் வலிவலம் மேயவனே

## திருமயிலாப்பூர்

வளைக்கை மட நல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச்சரத் தான்தொல கார்த்திகை நாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்

## பஞ்சாட்சரத் திருப்பதிகம்

தும்ம விருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையினுந்துணை யஞ்செழுத்துமே

## திரு ஆலவாய்

மண்ணெலர் நிகழ மன்னனாய் மன்னு
மணிமுடிச் சோழன்றன் மகளாம்
பண்ணினேர் மொழியாள் பாண்டிமாதேவி
பாங்கினாற் பணிசெய்து பரவ
விண்ணுளா ரிருவர் கீழொடு மேலு
மளப்பரி தாம் வகை நின்ற
அண்ணலா ருமையோ டின்புறுகின்ற
வாலவா யாவது மிதுவே

## திருச்சண்பைநகர்

எந்தமது சிந்தைபிரியாதபெரு
மானென விறைஞ்சியிமையோர்
வந்துதுதி செய்யவளர் தூபமொடு
தீபமலி வாய்மையதனால்
அந்தியமர் சந்திபல வர்ச்சனைகள்
செய்யவமர் கின்றவழகன்
சந்தமலி குந்தளநன் மாதினொடு
மேவுபதி சண்பைநகரே.

## திருநெல்வெண்ணெய்

நல்வெணெய் விழுதுபெய் தாடுதிர் நாடடொறும்
நெல்வெணெய் மேவிய நீரே
நெல்வெணெய் மேவிய நீருமை நாடொறும்
சொல்வன மிடுவது சொல்லே

நல்லெ(ண்)ணெய் விழுது - நல்லவெண்ணெயை உருக்கிய நெய்யை பெய்து - ஏனைய பால், தயிர், கோமயம், கோசலம் என்பவற்றோடு நாள் தோறும் பஞ்சகவியமாகக்கூட்டி திருமஞ்சனம் கொண்டருள்வீர்.

## திருநல்லூர்ப்பெருமணம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூரப் பெருமணம் பாட்டு மெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணம் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம் பரனே.

## திரு நல்லூர்

பெண்ணமருந் திருமேனியுடையீர் பிறங்கு சடை தாழப்
பண்ணமரு நான் மறையே பர்டியாடல் பயில்கின்றீர்
திண்ணமரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மண்ணமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே

## திருவிடைமருதூர்

பொங்கு நூன் மார்பினீர் பூதப்படையினீர் பூங்கங்கை
தங்கு செஞ்சடையினீர் சாமவேத மேகதினீர்
எங்குமெழிலார் முறையோர்கன் முறையாலேத்த விடைமருதில்
மங்குறோய் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே

படை - கணம் மங்குல் - மேகம்

## திருமறைக்காடு

சதுர்மறை தான்றுதி செய்து வணங்கும்
மதுரப் பொழில் சூழ்மறைக் காட்டுறைமைந்தா
இதுநன்கிறை வைத்தருள் செய்க வெனக்குன்
கதவந்திருக் காப்புக்கொள் ளுங்கருத்தாமே

சதுரம் மறை – நால்வேதம். மதுரம்–தேனினிமை, இறை-விடை

சங்கத்தர ளம்மவை தான்கரைக்கேற்றும்
வங்கக்கடல் சூழ் மறைக் காட்டுறை மைந்தா
மங்கையுமை பாகமு மாகவி தென்கொல்
கங்கைசடை மேலடை வித்த கருத்தே.

சங்கம்-சங்குகள். தரளம்–முத்துக்கள், எற்றும்- (அலைகள்) எறியும். வங்கம்-மரக்கலம்

## திருநாகேச்சரம்

பொன்னேர் தருமேனிய னேபுரியும்
பின்னேர் சடை யாய்விரை காவிரியின்
தன்னீர்வய நாகேச் சுரநகரின்
மன்னேயென வல்வினை மாய்த்தறுமே

பொன் ஏர்தருமேனியன்-பொன்னைப் போல ஒளி தரும். திருமேனியை உடையவன். ஏர் உவமைவுருபு. விரை – (காவிரி) நீர் விரைந்தோடும், (காவிரி) நீர் மன்னே- இறைவனே. வல்வினை மாய்ந்து அறும். என்றது போல இத்திருப்பதிகம் முழுதும்பாடி–யருளியதால் இத்தல வழிபாடு நம் பழவினைப் பற்றறுக்கும் என்பது.

## திருப் பிரம்மபுரம்

உற்றுமை சேர்வது மெய்யினையே
உணர்வது நின்னருள் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே
கனல்விழி காய்வது காமனையே
அற்றம் மறைப்பதும் உன்பணியே
அமரர்கள் செய்வதும் உன்பணியே
பெற்றும் உகந்தது கந்தனையே
பிரமபு ரத்தை உகந்தனையே

# 4, 5, 6 - ம் திருமுறைகள்

## திருநாவுக்கரசு (அப்பர்) சுவாமிகள் தேவாரம்

### பெரிய திருத்தாண்டகம்

அருந்துணையை அடியவர்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகல்ஞானந் தகத்துள் தோன்றி
வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்களகத்தடக்கி மடவாரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க்கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே

### வினாவிடைத்திருத்தாண்டம்

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
ஓரூர னல்லன் ஒருவம னில்லி
அப்படியும் அந்நிறமும் அவ் வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவ என்றெழுதித் காட்டொணாதே

### தனித்திருத்தாண்டகம்

திருக்கோயி லில்லாத திருவி லூரும்
திருவெண்ணீ றணியாத திருவிலூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும்
பாங்கினொடு பலதளிகளில்லாவூரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா வூரும்
விதானமும் வெண்கொடியு மில்லாவூரும்
அருப்போடு மலர் பறித்திட்டுண்ணாவூரும்
அவை யெல்லாம் ஊரல்ல அடவியாடே.

## நின்றதிருத்தாண்டகம்

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகிநாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.

## போற்றித்திருத்தாண்டகம்

எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி
எரி சுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லர் மழுவாட்படையாய் போற்றி
கொல்லுங் கூற் றொன்றை யுதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றாரிடும்பை களைவாய் போற்றி
வில்லால வியனரணம் எய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி

சிவன் – சிவன்வடிவம் என்ன நின்றாய் – சொல்லுமாறு கலந்து நின்றவனே.

பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி
பல்லுழியாய் படைத்தாய் போற்றி
ஒட்டகத்தே ஊணா உகந்தாய் போற்றி
உள்குவா ருள்ளத் துறைவாய் போற்றி
காட்டகத்தே ஆடல் மகிழ்ந்தாய் போற்றி
கார்மேக மன்ன மிடற்றாய் போற்றி
ஆட்டுவதோர் நாக மசைத்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி

பாட்டு-பாடுதல் ஆட்டு-ஆடுதல் ஊண்-உண்ணுதல் காடு-சுடலை அசைத்தல்-கட்டுதல்,

முக்கணா போற்றி முதல்வா போற்றி
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி
தக்கணா போற்றி தருமா போற்றி
தத்துவனே போற்றியென் தாதாய் போற்றி
தொக்கணா வென்றிருவர் தோள்கை கூப்பத்
துளங்கா தெரிசுடராய் நின்றாய் போற்றி
எக்கண்ணும் கண்ணிலேன் எந்தாய் போற்றி
எறிகெடில வீரட்டத் தீசா போற்றி

தருமன் – அறவடிவினன் தொக்கு– கூடி துளங்காது -அசையாது இங்கு எரிசுடராய் என்றளியது.

## திரு ஆலவாய் திருத்தாண்டகம்

முளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிருஞ்சடை முடிமேல் முகிழ்வெண் திங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணாக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தால் துவள நீறாத்
தூமுத்த வெண்முறுவ லுமையோடாடித்
திளைத்தானைத் தென்கூடல் திருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே

## பொது

சங்க நிதி பதுமநிதி யிரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போமல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே

சங்க நிதி-சங்குவடிவாகக் குவிக்கப்பட்ட நிதி பதுமநிதி-தாமரை வடிவாகக் குவிக்கப்பட்ட நிதி தரணி–பூமி

## திருவுற்றியூர்

மனமெனுந் தோணி பற்றி மதியெனும் கோலையூன்றிச்
சினமெனும் சரக்கை ஏற்றிச் செறிகட லோடும் போது
மதனெனும் பாறை தாக்கி மறியும்போ தறிய வொண்ணர்
துனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடைய கோவே

## திருவாரூர்

சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி
சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி
பொங்கரவா நின்பாதம் போற்றி போற்றி
புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி
அங்கமலத் தயனேடு மாலுங்காணு
அனலுருவா நின்பாதம் போற்றி போற்றி
செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

## ஈசன் இயற்கை

பன்னில் ஊறும் பழத்தினும் இன்சுவை
என்னில் ஊறி எனக்கே களிதரும்
உன்னில் உன்னும் உறுவிடில் விட்டிடும்
என்னுள் ஈசன் இருந்த இயற்கையே

## பொது

ஞானத் தால்தொழு வார்சிவ ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாய் உனை நானுந் தொழுவனே

## திருப்பாதிலிப்புலியூர்

கருவாயக் கிடந்துன் கழலில் நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீடா திரிப்புலியூர் அரனே

# ஏழாம் திருமுறை

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்
## (ஆளுடைய நம்பி)

### திருவெண்ணெய் நல்லூர்

பித்தாபிறை சூடிபெருமானே அருளாளா
எத்தான்மறவாதே நினைக்கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்
அருட் டுறையுள்
அத்தா உனக் காளாயினி அல்லேன்எனல் ஆமே.

எத்தான்—எதனாலும், அருட்டுறை—திருவெண்ணை நல்லூர்த் திருக்கோயில்.

### திருத்தொண்டத் தொகை

தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீலக் கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாறனடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

தமது அடியார்களை வணங்கி அவர்கள் மீது பதிகம் பாடும்படி யரம்பொருள் சொல்லி "தில்லைவாழ்ந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துத் தந்து திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் சுந்தரர் பாடியது இப்பாடல்.

### திருவாரூர்

இங்ஙனம்வந் திடர்ப்பிறவிப் பிறந்தயர்வேன் அயராமே
அங்ஙனம்வந் தெனைஆண்ட அருமருந்தென் ஆரமுதை
வெங்கனல்மா மேனியினை மான்மருவுங் கையானை
எங்ஙனம்நான் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே.

## திருப்புகலூர்

தம்மையே புகழ்ந் திச்சை பேசினும்
சார்வினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தரும் சோறும கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகமாள்வதற்(கு)
யாது மையுற வில்லையே.

இச்சைபேசினும்—அவர் விருப்பத்தை உணர்ந்து அதற்கேற்ப
இச்சகம் பேசினாலும். அம்மையே-மறுமையில்

## திருக்கழிப் பாலை

எங்கே னுமிருந்துன் அடியேன் உனை நினைந்தால்
அங்கே 'வந் தென்னொடும் உடனாகி நின்றருளி
இங்கே என் வினையை அறுந்திட் டெனையாளும்
கங்கா நாமகனே கழிப்பாலை மேயானே

## திருக்குருகாவூர் வெள்ளடை

பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய் கடுவிருட்சுடரொப்பாய்
மண்ணிடை அடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே
நள்ளிரவில் தோன்றும் சோதியை ஒப்பாய்,

## திருவலிவலம்

நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்டே னேன் அறியாமை அறிந்து
கல்லியல்மனத் தைக்கசி வித்துக்கல்
கழலடி காட்டிஎன் களைகளை அறுக்கும்
வல்லியல் வானவர் வணங்க நின் றானை
வலிவ லந்தனில் வந்து கண்டேனே.

நாவுக் என் றும் பாடம். கல்இயல்மனத்தை-கல்லின் இயல்பு
கொண்ட திண்ணிய மனத்தை. களைகள்-குற்றங்கள்,

## கோயில்

உய்த்தாடித் திரியாதே உள்ளமே
ஒழிகண்டாய் ஊன் கண் ஓட்டம்
எத்தாலும் குறைவில்லை என்பர்காண்
நெஞ்சமே நம்மை நாளும்
மைத்தாடும் அரவினன் படர்சடையன்
பரஞ்சோதி பாவந் தீர்க்கும்
பித்தாடி புலியூர்ச் சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்ற மன்றே,

ஊன்கண் ஓட்டம் ஒழிகண்டாய் – உடம்பினிடத்தே விருப்புக் கொண்டு ஒடு தலை விடுவாயாக, பித்தாடி - பெயர்

## திருக்கழுமலம்

வரும்பெரும் வல்வினை என்றிருந் தெண்ணி
வருந்தலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
விரும்பி என் மனத்திடை மெய்குளிர்ப் பெய்தி
வேண்டி நின்றேன் தொழு தேன்விதியலே
அரும்பினை அலரினை அமுதினைத் தேனை
ஐயனை அறவன்என் பிறவிவேர் அறுக்கும்
கரும்பினைப் பெருஞ்செந்நெல் நெருங்கிய கழனிக்
கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே.

## திருப்புன்கூர்

நற்ற மிழ்வல்ல ஞானசம் பந்தன்
நாவி னுக்கரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதன் நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினும் குணம்எனக் கருதும்
கொள்கை கண்டுநின் குறைகழல் அடைந்தேன்
பொற்றி ரன்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூர் வளானே

## திருநாவலூர்

தன்மையினல்அடி யேனைத்தாம்
ஆட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசிட வன்றொண்டன்
என்பதோர் வாழ்வுதந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத்தந்
தென்னைப் போகம் புணர்ந்த
நன்மையினார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே

## திருநாகைக்காரோணம்

மறிஏறு கரதலத்தீர் மாதிமையேல் உடையீர்
மாநிதியந்; தருவனென்று வல்லீராய் ஆண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீர் அடிகேள்
கிறியுமாற் பருவேனே திருவாணை உண்டேல்
பொறிவிரவு நற்புகந் கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந்தீரே

மறி-மான். மாதிமை:அழகு. சுரிகை-பிரப்பு, பட்டிகை-திருமார்பில் குறுக்கேயிடுவது.

## திருவீழிமிழலை

பரந்த பாரிடம் ஊரிடைப்பலி பற்றிப்
பார்த்துணுஞ் ... மாயினீர்
தெரிந்த நான்மறை யோர்க்கிடம்
ஆகிய திருமிழலை
இருந்து நீர்த்தமிழோ டிசைகேட்டு மிச்சையாற்
காசு நித்தல் நல்கினீர்
அருந்தண் வீழிகொண் டீர்அடி
யேற்கும் அருளுதிரே

பாரிடம் - பூதம், காசு நித்தல் நல்கினீர் – இத்தலத்தில் ஞான சம்பந்தருக்கும் அப்பர் சுவாமிகளுக்கும் சிவபெருமான் படிக்காசு அருளினர்

# எட்டாம் திருமுறை

## மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகம்

### 5 திருச்சதகம்

#### அறிவுறுத்தல்

அரியானே யாவர்க்கும் அம்பரவா அம்பலத்தெம்
பெரியானை ஆட்கொண்ட பெய் -கழல் கீழ்
விரை ஆர்ந்த மலர்தூவேன் வியந்து அலறேன் நயந்துஉருகேன்
தரியேன் நான் ஆம் ஆறு என் சாவேன் நான் சாவேனே

விரை-மணம், அம்பரவா-சித்ஆகாசம், சபாபதியே.

#### சுட்டறுத்தல்

தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும் பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை
மூவர்கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியாரோடும்
மேன்மேலும் குடைந்தாடி யாடுவோமே

செழும் பொழில்கள் – வளமான உலகங்கள், பயந்து- சிருஷ்டித்து, மூர்த்தி – அனைத்துமானவன், மூதாதை – எல்லார்க்கும் முதல்வன், மேவினோம்-கூடினோம், குடைந்து-ஆனந்தக்கடலில் மூழ்கி.

#### கைம்மாறு கொடுத்தல்

போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்து நின்று
ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்
ஏற்று வந்து எதிர் தாமரைத் தாள்உறும்
கூற்றம அன்னது ஓர் கொள்கை என்கொள்கையே

ஏர்த்து வந்து-திருவடிகளை அடைந்த கூற்றம் அன்னது-யமனை ஒத்தது.

## ஆனந்த பரவசம்

பேசப்பட்டேன் நின்னடியாரில் திரு நீறே
பூசப்பட்டேன் பூதல ராலுன் அடியானென்று
ஏசப்பட்டேன் இனிப் படுகின்ற தன்மையாதால்
ஆசைப்பட்டேன் ஆட்பட்டெனுன் அடியேனே

அடியேன் அல்லேன் கொல்லோ தானெனை
ஆட்கொண்டிலை கொல்லோ
அடியா ரானார் எல்லாரும் வந்துன தான் சேர்ந்தார்
செடிசேர் உடலமிது நீக்க மாட்டேன் எங்கள் சிவலோகா
கடியேன் உன்னைக் கண்ணாரக் காணுமாறு காணேனே

## அனுபோகசுத்தி

செய்வ தறியாச் சிறு நாயேன்
செம்பொற் பாத மலர் காணாப்
பொய்யர் பெறும்பே ரத்தனையும்
பெறுதற் குரியேன் பொய்யிலா
மெய்யர் வெறியார் மலர்ப்பாதம்
மேவக் கண்டுங் கேட்டிருந்தும்
பொயயனேன் நான் உண்டுடுத்திங்
கிருப்ப தானேன் போரேறே.

வெறி ஆர் – பரிமளம் நிறைந்த, மேவ – பொருந்த, ஏறே-ஆண்
சிங்கமே.

## காருண்யத்திரங்கல்

போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்குகின்றேன்
போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன்றில்லை
போற்றியோ நமச்சிவாய புறமெனப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சிவாய சய சய போற்றி போற்றி

புயங்கனே-பாம்பை அணிந்தவனே, புகல் இடம்–கதி, போக்கல்
போக்கிவிடாதே, கண்டாய்–அசைச்சொல்

## ஆனந்தகீதம்

பொருத்தம் இன்மையேன்; மெய்ப்மை உண்மையேன்
'போத என்று எனைப் புரிந்து நோக்கவும்,
வருத்தம் இன்மையேன்; வஞ்சம் உண்மையேன்;
மாண்டிலேன்; மலர்க் கமலபாதனே
அரத்த மேனியாய் அருள்செய் அன்பரும்,
நீயும் அங்கு எழுந்தருளி இங்கு எனை
இருத்தினுய்; முறையோ? என் எம்பிரான்,
வம்பனேன் வினைக்கு இறுதி இல்லையே

## திருப்பூவல்லி

வணங்கத் தலைவைத்து வாரகழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியா கூட்டமும் வைத் தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ

இணங்க-கூடிப்பழக, அணங்கொடு-உமா தேவியாரொடு, குணம் கூரப்பாடி-மகிமையை மிகுதியாகப்பாடி

## நீத்தல் விண்ணப்பம்

தாரகை போலும் தலைத் தலைமாலை தழல் அரப்பூண்
வீர என்-தன்னை விடுதி கண்டாய்? விடின் என்னைமிக்கார்
'ஆர் அடியான் என்னின் உத்தரகோச மங்கைக்கு அரசின்
சீர் அடியார் அடியான்' என்று நின்னைச் சிரிப்பிப்பனே

தாரகை – நக்ஷத்திரம், தலைத்தலைமாலை – தலையில் கபாலமாலை, அரப்பூண்-விஷப்பாம்பை ஆபரணமாகப்பூண்ட· மிக்கார்-மேலோர்

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பை; தொழும்பையும் ஈசற்கு என்று
விரிப்பிப்பன்; என்னை விடுதி கண்டாய்?- விடின் வெம் கரியின்
உரிப்பிச்சன், தோல் உடைப்பிச்சன், நஞ்சு ஊண் பிச்சன் ஊர்ச் சுடுகாட்டு
எரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப் பிச்சன் என்று ஏசுவனே

சீறும் – வெறுக்கும், பிழைப்பை-குற்றத்தை, தொழும்பையும் – தொண்டு செய்ததையும், கரி – யானை, உரி – தோல், பிச்சன் – பித்தன், எரிப்பிச்சன் – தீயில் உழலும் பித்தன்

## திருக்கோத்தும்பி தில்லை

நான் ஆர் என் உள்ளம் ஆர் ஞானங்கள் ஆர் என்னை யார் அறிவார்
வானோர் பிரான் எ‌ன்னை ஆண்டிலனேல் மதிமயங்கி
ஊன் ஆர் உடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேன் ஆர் கமலமே சென்று ஊதாய் கோத்தும்பி

உடைதலையில் - உடைந்த தலையோட்டில் உண் பலி - உண்பதற்-கான பிக்ஷை.

தேவர் பெருமான் என்னை ஆட்கொள்ளாது விட்டிருப்பானாகில் எனக்கு ஒரு மதிப்பும் இல்லை; என்னை மதிக்கும்படி புத்திகெட்டவர் யாருமில்லை மாமிசம் பொருந்திய பிரம்மகபாலத்தில் பிக்ஷையேற்று உண்கிற அம்பலவாணனது அமிர்த சொருபத்தைக் கோத்தும்பி நீ ஊதிப்போற்றுவாயாக.

## குயிற்பத்து

கீதமினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக் கப்பால்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதிகுண மொன்று மில்லான் அந்த மிலான் வரக்கூவாய்

புலப்படுகிற பிரபஞ்சமாகவும் புலன்களுக்கு அப்பாற்பட்டவனாகவும இருப்பவன் பரமன் ஒருவனே. அவனுக்கு அன்னியமாக ஒன்றுமே இல்லை

## திருத்தோணாக்கம்

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல் விளங்கச்
செருபுற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்கு
அருட்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ.

கண்ணப்பநாயனார் தம் வாயில் நீர் முதலியவற்றைக் கொண்டு வந்து பூஜை செய்து திருவருள் பெற்ற வரலாற்றைப் புகழ்ந்து தேணோக்கம் ஆடுவோம்.

## திருப்பொன்னூசல்

மாதாடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை ஆட்கொண்டென் தொல்பிறவித்
தீதோடாவண்ணத் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன் பால்
போதாடு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

தாது - பூவில் உள்ளபொடி. மகரந்தம். கோதுஆட்டி - குற்றம் களைந்து, தீதுஒடாவண்ணம் – கர்மம் வளராத விதத்தில். போது - மலர். இறைவன் அருளால் அடியவர்கள் கர்மபந்தனம் நீங்கப் பெற்று அருள்துறையில் முன்னேறுகின்றனர்.

## கோயில் மூத்ததிருப்பதிகம்

ஏசா நிற்பர் என்னை உனக் கடியா னென்று பிறரலல்லாம்
பேசா நிற்பர் யான்தானும் பேணா நிற்பேன் நின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந் திருவோலக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடும் எந்தாய் இனித்தான் இரங்காயே.

ஏசாநிற்பர் – தூற்றுவார்கள். பேசா நிற்பர் – பாராட்டிப்பேசுவார்கள். பேணநிற்பேன் – விரும்பியிருப்பேன்

## கோயிற்றிருப்பதிகம்

இன்றெனக் கருளி இருள் கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின் தன்மை நினைப்பற நினைந்தென்
நீயலால் பிறிதுமற் றின்மை
சென்று சென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாம்
திருப் பெருந் துறையுறை சிவனே,
ஒன் றும் நீயல்லை அன் றியொன் றில்லை
யாருன்னை அறியகிற் பாரே

## திருப்பொற்சுண்ணம் - தில்லை

முத்து நல் தாமம்பூ மாலை தூக்கி
முளைக்குடந் தூபம் நல தீபம் வைம்மின்
சத்தியுஞ் சோமியும் பார்மகளும்
நாமக ளோடுபல் லாண்டிசைமின்
சித்தியுங் கௌரியும் பார்ப்பதியுங்
கங்கையும் வந்து கவரி கொண்மின்
அத்தன்ஐ யாறன் அம் மானைப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்து நாமே

## ஆனந்தமாலை

என்னால் அறியாப் பதம் தந்தாய்
யான தறியா தேகெட்டேன்
உன்னால் ஒன்றுங் குறைவில்லை
உடையாய் அடிமைக் காரென்பேன்
பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொருங்கூடாது
என்நா யகமே பிற்பட்டிங்
கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே

யார் –யார் ஊர். என்நாயகமே – என் தலைவனே. நோய்க்கு –பிறவி நோய்க்கு. விருந்தாய் – இலக்காய்.

## எண்ணப்பதிகம்

உரியேன் அல்லேன் உனக்கடிமை
உன்னைப் பிரிந்திங் கொரு பொழுதும்
தரியேன் நாயேன் இன்னதென்
றறியேன் சங்கரா கருணையினற்
பெரியோன் ஒருவன் கண்டு கொள்
என்றுன் பெய்கழல் அடிகாட்டிப்
பிரியேன் என்றென் றருளிய அருளும்
பொய்யோ எங்கள் பெருமானே

## அன்னைப்பத்து

வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்
நாதப் பறையினர் அன்னே என்னும்
நாதப் பறையினர் நான்முகன் மாலுக்கும்
நாதரிந் தனார் அன்னே என்னும்

சிவன் வேதமொழியன், வெண்ணீறு பூசியவன் ஒசைவடிவினன் என்று ஒருசிறு குழந்தை தன் தாயிடம் சொல்லுகிறது

## வாழாப்பத்து

பாரொடு விண்ணாய்ப் பரந்தஎம் பரனே
பற்று நான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார் கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள் புரிவாயே

## அச்சப்பத்து - தில்லை

புற்றில் வாள் அரவும் அஞ்சேன், பொய்யர்தம்—
மெய்யும் அஞ்சேன்
கற்றைவார் சடைஎம் அண்ணல், கண்ணுதல்
பாதம் நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை, உண்டென
நினைந் தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால், அம்மநாம்
அஞ்சுமாறே.

வாள் - ஒளியுள்ள, கற்றைவார் சடை – திரண்ட நீண்ட சடை.

## அச்சோப்பதிகம் - தில்லை

நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன் தன்கூத்தை எனக்கு
அறியும் வண்ணம் அருளியவா றார்பெறுவார் அச்சோவே

உலக வாழ்வை நாடியிருப்பது நன்னெறி என்று நான் நினைத்திருந்தேன். அதுசிறு நெறியென்று அவன் காட்டியருளினன் பரமனையும் அவனது அருளையும் சார்வது. தான்பெருநெறி. அவன் நடராசனாகவும் சகுணப் பிரம்மமாகவும், சிதம்பர ரகசியமாகவும் அதாவது நிர்க்குண பிரம்மாகவும் இருப்பதைக் காட்டியருளினன்.

## ஆசைப்பத்து

மொய்ப்பால் நரம்பு கயிறாக மூளை
என்பு தோல் போர்த்த
குப்பா யம்புக் கிருக்ககில்லேன்
கூவிக் கொள்ளாய் கோவேயோ
எப்பா லவர்க் கும் அப்பா
லாம் என்னா ரமுதேயோ
அப்பா காண ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே

மொய்-நெருங்கிய. பால் நரம்பு-வெள்ளை நரம்பு. குப்பாயம்-உடம்பு ஆகிய சட்டை

கையால் தொழுதுன் கழற்சே
வடிகள் கழுமத் தழுவிக்கொண்டு
எய்யா தென்றன் தலைமேல்
வைத்தெம் பெருமான் பெருமானென்று
ஐயா என்றன் வாயா
லரற்றி அழல்சேர் மெழுகொப்ப
ஐயாற் றரசே ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே

கழும்-பொருந்த. எய்யாது-தளராது.

உன் திருவடியைத் தழுவிக் கொண்டும் அதை என் தலைமேல் வைத்துக்கொண்டும் எம்பெருமானே என்று போற்றவும் தீயிலிட்ட மெழுகு போன்று உள்ளம் உருகவும் ஆசைப்படுகிறேன்.

# மாணிக்கவாசகர்

திருவாசகச் செல்வர்: சோ. வன்மீகநாதன்

நூல்: சாகித்ய அகடாமி

மாணிக்கவாசகருக்குத் தனித்ததொரு வாழ்க்கை இருந்த தில்லையென்று துணிவுடன் கூறலாம். திருவாசகம் தான் மாணிக்கவாசகர், மாணிக்கவாசகர் தாம் திருவாசகம். அதுவே அவருடையவாழ்க்கை வரலாறு. அதுமட்டுமன்று அந்நூல் ஒவ்வொரு ஆன்மாவின் வரலாறென்றே கூறலாம். கடவுளைத் தேடியலையும் ஆன்மாவின் கதை அது. அப்படியிருப்பதனால், கடவுளை நாடி அலையும் ஆன்மாவின்யாத்திரையில் அது அனுபவிக்கும் ஐயங்கள் மனக்கலக்கங்கள் மனமுறிவுகள், ஆவல்கள், அவலங்கள், இன்பதுன்பம், களிப்பு எக்களிப்பு, பேரானந்தம் இவை அனைத்தையும் சித்தரித்துக் காட்டுகின்றது அந்நூல். சம்சார சாகரத்தின் கொடிய அலைகளால் அலங்கமலங்க அடிக்கப்பட்ட ஆத்மாவுக்குத் திருவாசகம் ஒரு கலங்கரை விளக்காகப் பயன்படுகிறது. யாவரும் பெறவுறும் ஈசன் காண்க என்பது அதன் மையக் கருத்து.

திருவாசகத்தின் தனிச்சிறப்பு யாதெனின் ஒவ்வொரு மனிதனும் தன்னை மாணிக்கவாசகர் இடத்தில் அமைத்துக்கொண்டு மாணிக்கவாசகராகவே தன்னைப் பாவித்துக்கொண்டு அவருடைய சொற்களைத் தனதாக்கிக்கொண்டு தன் நெஞ்சத்தின் அடித்தளத்திலிருந்து ஓலக்குறல் எழுப்பி இறைவனை இறைஞ்சி நம்பிக்கை மிளிரும் கண்களால் அவனை ஏறெடுத்துப் பார்த்து அவன் முகத்தில் அருள், அன்பு, அமைதி நிலவுவதைக் கண்டு களிகூர்ந்து கடைத்தேறலாம்.

நான் கற்பனையாகத் திருவாசகத்தை காண்டங்களாக வகுத்தவற்றின் நான்காவது காண்டத்தின் முதற்பகுதியில் அடங்கிய 11 பதிகங்களில் 23, 27, 38, 39 என் கொண்ட பதிகங்கள் அனைத்துமேசாவைவெளிப்படையாகவேண்டுவன அமரத்துவத்தை அளிக்கும் சாவை வேண்டுபவன 26ம் பதிகமாகிய அதிசயப்பத்தும் மானிட உடலில் பிறந்த நோக்கம் நிறைவேறி விட்டதென்று இறைவனுக்கு நினைவூட்டி, இனிமேலும் சாவைத்தள்ளிப் போடக் கூடாதென்ற கோரிக்கையை மறைமுகமாகச் செய்கிறது. கடவுள்

இப்போது தன்னுடைய பொங்கி வழியும் பேரருளால் மாணிக்க வாசகருக்கு திருக்கழுக்குன்றத்தில் அளிக்கப்பட்டகாட்சியை பேரு வகையுடன் வர்ணிக்கிறார் மாணிக்கவாசகர்.-

பதிகம் 30 – பிணக்கிலாத பெருந்துறைப்பெரு.

மான் உ௬ நாமங்கள் பேசுவார்க்கு
இணக்கி லாததோரின்ப மேவருந்
துன்பமே துடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்துமேல் வினை
யாமல் என்வினை ஒத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து
காட்டினாய் கழுக்குன்றிலே

,பேரின்பமே' என்பது விளிச்சொல். 'வருந்துன்பம்' என்றது 'மேல் வினையை,' ஆகாமியம் என்றவினையை,

தம் யாத்திரையின் கடைசிப் பகுதியை மாணிக்கவாசகர் மிக்க ஆர்வத்துடனும் எக்களிப்புடனும் தொடங்குகிறார். 45ம் பதிகமாய் யாத்திரைப்பத்தில் இறைவன் திருவடிகளை நாடிச் செய்யும் யாத்திரையைப்பற்றி இவ்வண்ணம் பாடுகிறார்.

'பூவார் சென்னி மன்னனெம்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளம் கலந்துணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா என்னப் பட்டன்பாய்
ஆட்பட்டீர்வந் தொருப்படுமின்
போவோங் காலம் வந்தது காண்
பொய்விட்டுடையான் கழல்புகவே

அவர் தனியாகச் செல்லவில்லை, அடியார் படையைத் திரட்டுகிறார். மாயப்படை வருமுன் வானவூரரைக் கைக்கொள்வோமென்று அவர்களை ஏவுகிறார், திருப்படை யெழுச்சி என்ற 46ம் பதிகத்தில் அவர் அடியார் திருக்கூட்டத்தை இவ்வண்ணம் திரட்டிஅணிவகுத்து வானவூரரைக் கைப்பற்ற வீரநடை போற்று விரைகின்றார்,

'ஞானவாள் ஏந்தும் ஐயர் நாதப் பறையறைமின்
மானமாஏறும் ஐயர் மதிவெண் குடைகவிமின்
ஆன நீற்றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம் நாம் மாயப்படை வாராமே

'தொண்டர்காள் தூசிசெல்வீர் பத்தர்காள் சூழப் போகீர்
ஒண்திறல் யோகிகளே பேரணி உந்தீர்கள்
திண்திறல் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நாடாள்வோம் நாம் அல்லற்படை வாராமே

ஒரு தொண்டர் மோக்ஷ நாட்டிற்குச் செல்லும் போது நாம் சாதாரணமாக இவ்வளவு தொலைவு தான் அவரைப்பின் தொடர்ந்து சென்று வழியனுப்ப முடியும், ஆனல் மாணிக்கவாசகரைப் பொறுத்த வரையில் அப்படியன்று. விதேகமுக்தி, அதாவது சாவிற்குப் பின் கடவுளுடன் வாழ்வு எத்தகையதென்று மாணிக்கவாசகரை அன்றி வேறு எவரும் உலகத்தின் மெய்ஞ்ஞான இலக்கிய நூல்கள் எதிலும் விளக்கியதில்லை என்று நினைக்கிறேன். இந்த ஒப்புயர்வற்றதும் தனிப்பட்ட பெருமையுடையதுமான மறைப்பொருள் விளக்கம் 49ம் பதிகமாகிய திருப்படையாச்சியில் கொடுக்கப்பட்டுள்ளது. அதற்கு மிகப்பொருத்தமாக 'சிவஉபாதி ஒழிதல்' என்ற உபதலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. துவந்துவங்கள் ஒழிகின்றன. கடவுள் மட்டுமே இருக்கின்றான். சாவுக்குப்பின் வாழ்வு என்று அழைக்கத்தக்க இக்காட்சி மாணிக்கவாசகருக்கு மட்டுமே இறைவனின் பேருளால் அளிக்கப்பட்டது அவரோ மனித சமூகத்தின் மீதுள்ள எல்லையற்ற அன்பின் காரணமாக அதன் வரலாற்றை நமக்களித்துச் சென்றுள்ளார். எடுத்துக்காட்டாக ஒரே ஒரு பாடலைகாண்போம்.

### திருப்படையாச்சி

கண்கள் இரண்டும் அவன்கழல் கண்டு
களிப்பன ஆகாதே
காரிகை யார்கள்தம் வாழ்விலென் வாழ்வு
கடைப்படும் ஆகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு
மறந்திடும் ஆகாதே
மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும்
வணங்குதும் ஆகாதே

பண்களி கூர்தரு பாடலொ டாடல்
பயின்றிடும் ஆகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள்
பாடுதும் ஆகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து
வெளிப்படும் ஆகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து
வெளிப்படும் ஆயிடிலே

சீலமின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித் தோலின் பாவைக் கூத்தாட்டாச் சுழன்று விழுந்துகிடப்பேனை மாலுங்காட்டி வழிகாட்டிவாரார் உலகம் நெறியேற கோலங்காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றே கூடுவதே பதிகமெனக் கூறலாம். திருவாசகமென்ற மாலைக்கு அது பதக்கம் போன்ற ஒரு அணி. அதன் பாடல்கள் எல்லாம்

அத்தன் ஐயன் அம்மை எனக்கு அருளியவாறு
யார் பெறுவார் அச்சோவே

என்றும் முடிகின்றன எடுத்துக்காட்டாக ஒரு பாடல்

முத்திநெறி அறியாத மூர்க்கத்ரோடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் ~~வண்ணவர்~~ வண்ணம்
சித்தமனம் அறிவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட
அத்தனெக் கருளிய வாறார் பெறுவார் அச்சோவே

இவ்வாராகத் திருவாசகம் முடிகிறது. மெய்ஞ்ஞானயியலின் கையேடு, ஆனந்தப் பரவசமாக இறைவனைப் போற்றிய பேரொலி உலகத்திலேயே தலைசிறந்த காதல் நாடகம், மானிட மணமகளையும தெய்வீக மணமகனையும், தலைவி தலைவனாகக் கொண்ட கதை முடிகிறது.

கர்ணபரம்பரையாக ஒருசெய்தி நிலவுகிறது. மாணிக்கவாசகரை வேட்டநெஞ்சர் யாரோ கேட்டார்களாம்'நீர் இயற்றியுள்ளமாபெரும் காவியத்தின் பொருள் யாது?' என்று அவர்–அவர்களை தம்முடன் அழைத்துச் சென்று தில்லையில் உள்ள கோவிலின் கர்ப்பகிரகத்துள் நுழைந்து, அங்கு வீற்றிருந்த சிவபெருமானைச் சுட்டிக்காட்டிவிட்டு ஒளிப்பிழம்பாகிய அவனுள் பதிகம் தோறும் அவர் பாடியுள்ள அதே ஒளிப்பிழம்பில் கலந்து விட்டாராம்.

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோவையார்

திருவளர் தாமரை, சீர்வளர் காவிகள ஈசர் தில்லைக்
குருவளர்பூங்குமிழ்,கோங்குபைங் காந்தள் கொண்டோங்கு
மருவளர் மாலை ஓர் வல்லியின் ஒல்கி அனநடைவாய்ந்
துருவளர் காமறைன் வென்றிக் கொடியோன் ஞெளிர்கின்றதே

போதோ! விசும்போ! புனலோ! பணிகளது பதியோ?
யாதோ அறிகுவ தேதும் அரிதியமன் விடுத்த
தூதோ, அனங்கன் துணையோ, இணையிலி தொல்லைத்தில்லை
மாதோ மடமயி லோஎன நின்றவர் வாழ்பதியே

பாயும் விடை அரன் தில்லையன்னாள் படைக்கண்ணிமைக்கும்
தோயும் நிலத்தடி தூமலர்வாடும் துயர்மெய்தி
ஆயும் மனனே அணங்கல்லன் அம்மா முலை சுமந்து
தேயும் மருங்குற் பெரும்பணைத் தோள் இச்சிறு நுதலே

---

## சிவபெருமான் பசு - பதி

பதி, பசு, பாசம் என்ற மூன்றும் அநாதி என்பது சைவ சித்தாந்த கொள்கையாம். இவை முறையே இறை உயிர், தளை என வழங்கும். உயிரை அநாதியாகவே ஆணவ மலம் பற்றியுள்ளது. இந்த ஆணவ மலத்தை பாசம் என்றும் கூறுவார்கள். எனவே ''பாசபத்தோ ஜீவ, பசு'' என்னும் வாக்கியப்படி பாசத்தினால் கட்டுண்ட உயிரே பசுவாகும்.

உயிர்களுக்கு, அதாவது பசுக்களுக்கு தலைவன் சிவபிரான், அப்பெருமானே பசுபதி என வேதங்களிலும் உபநிஷத்துக்களிலும், இதிகாச புராணங்களிலும் போற்றப் பட்டுள்ளார்,

# ஒன்பதாம் திருமுறை

## திருவிசைப்பா

### கருவூர்த் தேவர்

நையாத மனத்தினனை நைவிப்பான் இத்திருவே
ஐயாநீ உலாப்போந்த அன்றுமுதல் இன்றுவரை
கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலும்
செய்யாயோ அருள்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே

நையாத மனத்தினனை—வருந்தாது மகிழ்வுடன் இருந்த மனத்தை யுடைய. என்னை நைவிப்பான்-வருந்துதற் பொருட்டு, செய்யாயோ-அருள்செய்யாயோ?

### கங்கைகொண்ட சோளேச்சரம்

அன்னமாய் விசும்பு பறந்தயன் தேட
அங்ஙனே பெரியநீ சிறிய
என்னை ஆள விரும்பி என் மனம் புகுந்த
எளிமையை என்றும் நான் மறக்கேன்
முன்னம்யால் அறியா ஒருவனாம் இருவர்
முக்கணா நாற்பெருந் தடந்தோட்
கன்னலே! தேனே! அமுதமே! கங்கை
கொண்டசோ ளேச்சரத்தானே

அங்ஙனே — அந்த இடத்தில். ஆள விரும்பி — ஆண்டு கொள்ள விருப்பமுற்று. இருவன் — இரு தனமையுடைய ஒருவன் — அதாவது சிவனும் சக்தியுமானவன், அப்பனும் அம்மையுமான மூர்த்தி - எம் பெருமான் தமக்கு அருள் பாலித்த கருணைத்திறத்தை உளம் நெகிழ்ந்து போற்றுகிறார்

### பூந்துருத்தி நம்பி காட நம்பி

களையா உடலோடு சேரமான் ஆரூரன்
விளையா மதம் ஆரா வெள்ளானை மேல்கொள்ள
முளையாம்மதி முடி மூவா யிரவரொடும்
அளையா விளையாடும் அம்பலம் நின் ஆடரங்கே

களையா-நீங்காத. விளையா-விளைந்து பெருகி. மேற்கொள்ள—ஏறிச் செல்லும்படி முளையாம்மதி-முளைத்த சந்திரன், அளையா-கலந்து

எம்பந்த வல்வினை நோய் தீர்ந்திட் டெமையாளும்
சம்பந்தன் காளியர்கோன் தன்னையுமாட்கொண்டருளி
அம்புந்து கண்ணாளுந் தானும் அணிதில்லைச்
செம்பொன் செய் அம்பலமே சேர்ந்திருக்கை

அம்பு உந்து கண்ணாள்-கணை போன்ற விழியை உடைய உமையவள்
காளியர் கோன்-சம்பந்தன். பந்தம்-கட்டு

## திருவாலியமுதனார் கோயில்

அன்ன நடையார் அமுத
மொழியார் அவர்கள் பயில்தில்லைத்
தென்னன் தமிழும் இசையும்
கலந்த சிற்றம் பலந்தன்னுள்
பொன்னும் மணியும் நிரந்த
தலத்துப் புலித்தோல் பியற்கிட்டு
மின்னின் இடையாள் உமையாள் காண
விகிர்தன் ஆடுமே

அவர்கள் – அந்தப் பெண்கள். தென்னன்-பாண்டியன். பொன்னும் மணியும் நிரந்த தலம் – தங்க இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற சபை, பியல்-பிடரி.

## திருவிடைக்கழி - சேந்தனார்

சேவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள் சூழ் கோழிவெல் கொடியோன
காவனற் சேனை யென்னக்காப் பவன் என்
பொன்னைமே கலைகவர் வானே
தேவினற் றலைவன் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தூவிநற் பீலி மாமயி லூருஞ்
சுப்பிர மண்ணியன் றானே

சுப்பிரமண்ணியன் என்றே பாடல் வருகிறது.! தோகைமயிலில் ஏறி வருகிற குமரன் அவன் தே-தெய்வம். தூவி-சிறகு. பீலி-தோகை

## திருவாவடுதுறை

பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப
புகழாள ராயிரம் பூசுரர்
மெய்யே திருப்பணி செய்சீர்
மிகுகா விரிக்கரை மேய
ஐயா திருவா வடுதுறை
யமுதேயென் றுன்னை யழைத்தக்கால்
மையார் தடங்கண் மடந்தைக்கொன்
றருளா தொழிவது மாதிமையே.

## திருமாளிகைத் தேவர்-கோயில்

"வேறாக உள்ளத் துவகைவிளைத்
தவணிச் சிவலோக, வேதவென்றி
மாறாத மூவா யிரவரையும்
எனையும் மகிழ்ந்தாள வல்லாய்"! என்றும்;

"ஆறார் சிகர மகேந்திரத் துன்
அடியார் பிழைபொறுப்பாய்! அமுதோர்
கூறாய்" என்னும் குணக்குன்றே! என்னும்;
குலாத்தில்லை யம்பலக் கூத்தனையே.

இப்பாடலில் பல சொற்றொடர்கள் ஞானப்பொருள் பொதிந்து பொலிவனவாம்.

அவனிச் சிவலோகம்-HEAVEN UPON EARTH என்று ஆங்கில ஞானிகள் சொல்லுகிற சொல்லாட்சி! தில்லையே பூவுலகின் சொர்க்கம் என்பது மரபாகும். ஏனென்றால் வானளாவிய நடனத்தை ஆடும். திருவடிகள் அந்தத் தில்லை மண்ணிலே தான் பாதம் பதித்தாடுகின்றன.

வேதவென்றி-வேதத்திற்கு வாகை என்பது ஞானத்தின் கொடுமுடியேயாகும் இது வேதம் ஓதுவதால் பெறுகின்ற வெற்றி என்பது சமயிகளின் பொருள் வேதப்பயிற்சியினால் பெறுகிற வெற்றிஎன்பது ஞானச் செய்பொருள்

ஆறார் சிகரம்-பல ஆறுகள் அடர்ந்தோடிக் கலக்கிற மலை உச்சி என்ற பொருளிலே, ஞானச் சுரப்பிகளையும், அநுபவ நீருற்று நிலை-களின் தன்மையையும், இந்த அநுபவ நிலையின் சங்கமத்தையும் உணர்த்துகிறது.

"நற்றாய்' என்னும்; 'உன்னையன்றி மற்றொன்
றுணரேன்' என்னும்; உணர் வுண்களுக்கப்
பெற்றாய்பி ஐந்தெழுத்துத் 'தும்பிதற்றிப்
பிணிதீர்வெண்ணீறிடப் பெற்றேன்' என்றும்;
'கற்றாய சோதி மகேந்திரம் சூழ
மனத்திருள் வாங்கிச் சூழாத நெஞ்சில்
குற்றாய்' என்னும்; 'குணக்குன்றே என்னும்;
குணத்தில்லை யம்பலக் கூத்தனையே.

கற்றாய சோதி மகேந்திரம் - நுண்ணுடல் என்பது ஒளியின் வளர்ச்சியினால் முன்னேற முன்னேற மகேந்திர நிலையாகிய உச்சி ஒளி துலங்குகிற பான்மையை எடுத்துக் காட்டுதல்

"மன் இருள் நீங்கி, ஒளிவளராத நெஞ்சில் பொருந்தாதவன் இறைவன்" என்பது சிந்தித்துணர வேண்டிய பகுதியாகும்.

## திருப்பல்லாண்டு - சேந்தனார்

சொலலாண்ட சுருதிப்பொருள் சோதித்து
தூய்மனத் தொண்டருள்ளீர்
சில்லாண் டிற்திதை யும்சில தேவர்
சிறு நெறி சேராமே
வில்லாண்ட கனகத்திரள் மேரு
விடங்கன் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதங்கடந்தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே

சொல் – புகழ், சுருதி – மறை. சோதித்தல் – ஆராய்தல், தூய்மை– புனிதம். சிதைதல் – அழிதல். கனகம்- தங்கம். திரள் – கூட்டம் விடங்கன்- வீரம் உடையவன், விடை-காளை.

புரந்தரன் மால் அயன் பூசலிட்டோல்மிட்
தின்னம் புகலரிதாய்
இரந்திரந் தழைப்ப என் உயிர் ஆண்ட கோவினுக்
கென்செய வல்லம் என்றும்
கரந்துங் கரவாத கற்பக னாகிக்
கரையில் கருணைக் கடல்
பரந்தும் நிரந்தும் வரம்பிலாப் பாங்கற்கே
பல்லாண்டு கூறுதுமே

புரந்தரன்-இந்திரன். பூசலிட்டு–போர்செய்து, ஓலமிட்டு–ஆரவாரம் செய்து. "இன்னம்" இதுகாறும் புகலுதல் – நுழைதல், கரத்தல்– ஒளித்தல்.

# பத்தாம் திருமுறை

## திருமந்திரம்

### திருமூலரும் திருமந்திரமும்

மூன்று மலைகள். கீழைத்தேய நாட்டில் இருந்து சிறப்பு மிகுந்த ஆத்மீகச் செல்வங்களை, என்றும் வாரி வழங்கிய வண்ணமே உள்ளன - அவையாவன:

1. மகேந்திரமலை – மேருமலை (மறைவாக உள்ளது)

2. விந்தயமலை (பாரத மாதாவின மத்தியில் உள்ளது)

3. இமயமலை.(பாரதமாதாவின் வடபாகம் உள்ளது)

மேருமலையில் இருந்தே ஆகமங்கள் புறப்படுகின்றன. அவை விந்தய மலைக்கு ஊடாகச் சென்று, இமயமலையில் ஒரு சிகரமாகிய கைலாய மலையில் ஒன்று சேருகின்றன, அங்கேகல்லால நிழலின் கீழ்மௌன நிலையில் அமர்ந்திருக்கும் ஞானகுருவாகிய தெட்சணமூர்த்தியின் சின் முத்திரையில் இருந்து ஆகமங்கள் வெளிப்படுகின்றன. இந்த அற்புதமான காட்சியை நேரடியாக சுந்தரநாத முனிவர் கண்டு களித்துக்கொண்டு இருக்கின்றார். இம் முனிவருடன் மற்றும் எழுவர் பங்கு கொண்டுள்ளனர்.

அப்பொழுது அங்கே கைலாயமலையை ஒருவர் வலம்வந்து கொண்டு இருக்கின்றார், அவர்தான் தென்னாட்டைச் சேர்ந்த மாலாங்கதேவர் ஆவார். மாலாங்கர்: யோக நித்திரையில் இருக்கும் எட்டு நாதர்களையும் கல்லால மர நிழலின் கீழ் காணுகின்றனர், மாலாங்கர் எட்டு நாதர்களில் ஒருவராகிய சுந்தரநாத முனிவரை மிகவும் நுட்பமாக அணுகுகின்றார்.

முனிசிரேஷ்டரே; நீங்கள் எல்லோரும் யாவர்? என மாலாங்கர் வினவுகின்றார். அப்பொழுது சுந்தரமுனிவர்:

திருநந்திதேவரின் அருளினாலே நாதாந்த முடியைநாம் எல்லோரும் கண்டு அனுபவித்துக் கொண்டிருக்கின்றோம். அதனால் எமக்கு நாதர் எனும் தீட்சா நாமம் வழங்கப்பட்டுள்ளது. நாதாந்த முடியின் சுந்தரத்தை அனுபவித்துக் கொண்டிருப்பதால் எனக்கு சுந்தரநாதர் என்று நாமம் வழங்கப்பட்டுள்ளது.

திருநந்திதேவரின் அருளாலே முதலை மூலத்தை — மூலாதாரத்தை - மூலனை நாம் எல்லோரும் நாடினோம்.

"நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்"
நந்தி அருளாலே மூலனை நாடினோம்"

மாலாங்கர் தனது நாட்டு நிலைமை பற்றிக் கூறுகின்றார். எம் நாட்டில் உள்ள பசுக்கள்—ஆன்ம கோடிகள் மேய்ப்பாரின்றித் தவிக்கின்றன, முனிசிரேஷ்டரே; தாங்கள் தான் எங்களுக்கு மூலத்தை உணர்த்த - அதனை நோக்கி வழிகாட்ட முடியும். தாங்கள் மூலத்தை - மூலாதாரத்தை — முதலை — மூலனை நாடியதால்

மூலரே! திருமூலரே! திருமூலநாதரே!

எம் நாட்டுக்கு எழுந்தருளுங்கள். எமது குறைகளை எல்லாம் நீக்கி விடுங்கள். என்று பகர்ந்து மாலாங்கர் சுந்தரநாத முனிவரை அழைக்கின்றார்.

திருமூலர் திருநந்திதேவரின்-தெட்சணா மூர்த்தியின் முழு அருளை; ஆதரவை அன்பைப் பரிபூரணமாகப் பெற்று,

......நந்தி அருளாவதென் செய்யும் நாட்டினில்......'எனப் பலவாறு எண்ணிக் கொண்டு மாலாங்கருடன் கைலாயமலையில் இருந்து தென்னாட்டிற்குப் புறப்படுகின்றார். பேரம்பலமாகிய கைலாயத்தில் இருந்து சிற்றம்பலம்பாகிய தென்னாட்டை நோக்கிப் புறப்படுகின்றனர் திருமூலர் பெருமான் முதலாவதுபடிக்கே இறங்கி

வருகின்றார் மற்றைய எல்லோரும் கீழ் இருந்து மேல் நோக்கிச் செல்கின்றார்கள் திருமூலரோ ; உலக நன்மை கருதி கீழ் நோக்கி வருகின்றார் கைலாயத்தில் இருந்து சிதம்பரத்திற்கு

நந்தி வழிகாட்ட நானிருந்தேனே என்றவாறு திருவாவடு துறையில் யோக நிட்டையில் அமர்ந்துவிட்டார்.

"மாலாங்கனே இங்கு யான் வந்த காரணம்...... சீலாங்க வேதத்தைச் செப்பவந்தேனே" என்று கூறுகின்றார்,

மாலாங்கர்தான் என்னை இங்கு அழைத்து வந்தார். அவர் எனது சீடர்களுள் முதல்வராவார், சிறப்பு மிகுந்த அங்கமாக விளங்கும் வேதத்தை அதாவது ஆகமத்தைச் செப்ப வந்தேன்.

இப்பொழுது திருவாவடுதுறையிலே பாடம் ஆரம்பிக்கப் படுகின்றது. அங்கே திருமூலர் வீற்றிருக்கின்றார், அவரைச் சுற்றி எழுவர் அமர்ந்துள்ளனர், அவர்கள் முறையே மாலாங்கன்-இந்திரன் சோமன், பிரமன், உருத்திரன், கந்துருக்காலாங்கி அஞ்சமலையன் ஆவர்.

திருமூலர் கடவுளை வாழ்த்துகின்றார்

நன்றி: சுவாமி உமாஷங்கரானந்த சரஸ்வதி
ஷிஓம்ஷர மௌனாச்சிரம்
கொழும்பு

## பாயிரம் - திருமூலர் வரலாறு

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன சிவன் ஆவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன் சிவ போதியின் நீழலிற்
சேர்ந்திருந்தேன் சிவன் நாமங்கள் ஓதியே

தெளிவுரை: உமாதேவியை ஒரு பாகத்திற்கொண்ட சிவனை, திருவாவடுதுறை என்னும் தலத்தை தங்குமிடமாகக் கொண்டு போதி (அரச) மரத்தின் நீழலிற் சேர்ந்து சிவபெருமா-னுடைய திருப்பெயர்களை ஓதிக்கொண்டு சிவயோகத்தில் அமர்ந்-திருந்தேன்.

போதப்-ஞானம்-சிவஞானம்

பின்னை நின் றென்னே பிறவி பெறுவது
முன்னை நன் ராக முயல் தவஞ் செய்திலர்
என்னை நன் ராக இறைவன் படைத்தனன்
தன்னை நன் ராகத் தமிழ் செய்யுமாறே

தெளிவுரை நான் முற்பிறப்பில் செய்த தவம் காரணமாக இறைவன் என்னைத் தமிழ் மொழியில் நன்ராகப் பாடும் வண்ணம் செவ்விய முறையால் படைத்தான்,

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கிற்பசு பாச நில் லாவே

பசு என்பது சீவான்மா, இது பாசபந்தச் சுழலிலே விழுந்து, வேற்றுமைகளுக்கு உள்ளாகி பதியாகிய பரமாத்மாவை உணராமல் நிற்கிறது இதறகுக் காரணம், பதிக்கும் பசுவுக்கும் இடையே பாசம் என்ற பிணைப்பு தடையாக இருக்கிறது. ஆகவே பதி என்பது அநாதியானதே அவ்வாறே பசுவும் பாசமும் அநாதியான பொருள் களாக நிற்கின்றன. இதைத்தான் முப்பொருள் உண்மை என்று சமய உலகம அழைக்கிறது. பரமாத்மாவை பாசம் என்ற பிணைப்பு அணுகஇயலாது. அது பசுவையே பிணைத்து நிற்கிறது. அப்படி நிற்கும் பாசமும, பதியானது பசுவை அணுகும் போது விலகி விடுகிறது

தெளிவுரை· மீ. ப. சோமு

## அடியார் பெருமை

என் தாயோடு என்னப்பன் ஏழெழ் பிறவியும்
அன்றே சிவனுக்கு எழுதிய ஆவணம்
ஒன்ருய் உலகம் படைத்தான் எழுதினுன்
நின்ருன் முகில் வண்ணன் ஏரெழுந்தாயே

என்னுடைய தாயாரும் தந்தையாரும் குழந்தை வரம் வேண்டிய அன்றே 49 பிறவிகளுக்கு, சிவனுக்கு உரியவன் சிவத்தொண்டு செய்பவன் என ஆவணம் எழுதி வைத்து விட்டார்கள்,

## அகத்தியம்

நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்றது எம்பெருமான் என்ன ஈசன்
நடுவுன அங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் ருனே

## தவம்

ஒடுங்கி நிலைபெற்ற வுத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனு மங் கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே

## திருக்கூத்துத் தரிசனம் – பொற்பதிக் கூத்து

மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூரும் இவ் வானின் இலங்கைக் குறியுறும்
சாரும் திலைவனம் தண் மாமலயத்து ஊடு
ஏறும் சுழுமுனை இவை சிவபூமியே

பூமியின் மத்திய கோட்டில் - ஒரே கோட்டில் உள்ள இடங்களான மேருமலை, இமயமலையில் உள்ள கைலாயம், சிதம்பரம், இலங்கை, இந்நான்கையும் முன்னோர்கள் சிவபூமியெனத் தேர்ந்தெடுத்தார்கள்.

## பொற்றில்லைக் கூத்து

இடைபிங்கலையின், இமவானோடு இலங்கை
நடு நின்ற மேரு நடுவாஞ் சுழுமுனை
கடவுந் திலைவனம் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்றும் பரமாம் பரமே

## சன்மார்க்கம்

சைவப் பெருமைத் தனிநா யகன் நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையகத்துள் ளார்க்கு வகுத்துவைத் தானே

## திருவருள் வைப்பு

அறிவில் அணுக அறிவது நல்கிய
பொறிவழி யாசை புகுத்திப் புணர்ந்திட்
டறிவது வாக்கி அடியருள் நல்குஞ்
செறிவொடு நின்றார் சிவமாயினாரே

சிவம்–குரு எம்மை முழுதாக ஆட்கொண்டு உய்வடைவிக்கும்போது உயிர், சரீரம், பிராணன், வியக்கத் தகுந்த ஒண்பொருளான சக்தி எல்லாம் செயலற்றுப் போகின்றது.

## சற்குரு நெறி

குருவென் பவனே வேதாக மங்கூறும்
பரனின் பணிகிச் சிவயோகம் பாவித்
தொருசிந்தை யின்றி உயர்பாச நீக்கி
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே

## சிவகுரு தரிசனம்

பத்திப் பணித்துப் பரவு மடிநல்கிச்
சுத்த வுரையால் துரிசறச் சோதித்துச்
சத்தும் அசத்துஞ் சதசத்துங் காட்டலாற்
சித்தம் இறையே சிவகுரு வாமே

ஆன்மா பக்தியாலே, திருவடித்தாமரையினை மௌனத்தால் நாடும் பொழுது, மாயா மயக்கங்கள் உண்டா, இல்லையா என்று சோதிக்கப் பட்டு, ஆன்மாவுக்கு சத்தியத்தை, உணர்த்த சித்தத்தின் ஊடாக இறைவனே சிவமாக குருவாக வெளிப்படுகின்றான்,

## திருவடிப் பேறு

இசைந்தெழும் அன்பில் எழுந்தபடியே
பசைந்தெழும் ஈசரை பாசத்துள் ஏகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத் துவந்தே

திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்
குருவடிவிற்கண்ட கோனையென் கோவைக்
கருவழி வாற்றிடக் கண்டு கொண்டேன்

கோவைக்கோனை – தெட்சணா மூர்த்தியை

## சமாதி

மூல நாடி முகட்டறை உச்சியில்
நாலு வாசல் நடுவே சிவாலயம்
மேலை வாசல் வெளியுறக் கண்டபின்
காலன் வாசல் கனவிலும் இல்லையே

தெளிவுரை:–

மூலநாடி என்றால் எழுபத்திராயிரம் நாடிகளையும் நடத்துகிற நாயகமான நாடி. இது சுழுமுனையே. அதன் முகட்டிலே உள்ள அறை என்பது, கபால உச்சியிலே இருக்கின்ற பிரமரந்திரம் என்ற நுட்பம், ஆங்கே நான்கு புறமும் வாசல் கொண்ட சிவாலயம் அமைந்திருக்கிறது. அங்கே மேல் வாசலில் மனம் ஒன்றி நின்று விடுவானால், சச்சிதானந்தப் பெருவெளி காணலாம் அப்படிக்கண்டு விட்டால் மரணமிலாப் பெருவாழ்வு சித்திக்கிறது. காலனுடைய வாசல் திறக்காது. கனவிலும் இல்லை மரண அனுபவம்.

## வயிரவி மந்திரம்

ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
ஓதி உணரில் உடலுயிர் ஈசனும்
பேதை உலகில் பிறவிகள் நாசமாம்
ஓத உலவாத கோலம் ஒன்றாகுமே

தெளிவுரை:-

குமரித்துறையில் திலைபெற்றிருப்பவளும் எப்பொருட்கும் ஆதியுமாகிய வயிரவியைத்து தித்தும் தியானித்து நின்றால், உடலில் உள்ள உயிர் சிவமாகும் பலவாறு பிறக்கும் பிறவிகள் ஒழியும்.

## அருளுடைமையின் ஞானம் வருதல்

சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகி லாமை
சிவனருள் கூடில்அச் சிவலோக மாமே

## அற்புதக் கூத்து

நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்
சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே

அற்புதத் திருக்கூத்தினைத் தாம் கண்டு தரிசித்த திறத்தை அருளிச் செய்கின்றார்.

## யாக்கை நிலையாமை

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணம் கொண்டார்
இடப்பக்கமே இறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந் தொழிந்தாரே

"இவ்வாராகின்றது சிலரது வாழ்க்கை" என்றவாறு 'நிலையாமை வரும் காலத்தை அறிந்தார் இல்லை; அதனால் செய்ய வேண்டுவதை விரைந்து செய்தலே அறிவுடைமை என்பதாம்.

## பிரணவ சமாதி

ஓம் எனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி
ஓம் எனும் ஓங்காரத் துள்ளே உரு அரு
ஓம் எனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓம் எனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே

பிரணவத்தின் உண்மையை-முக்கியத்தை-இயக்கத்தை இவ்வாறு அடிக்கோடிட்டு பாடியிருக்கிறார்.

# பதினோராந் திருமுறை

## திருவாலவாயுடையார் அருளிச்செய்த

## திருமுகப்பாசுரம்

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால் நிற வரிச்சிறகு
அன்னம் பயில் பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப்படியெனப் பாவலர்க்(கு)

உரிமையின் உரிமையின் உதவி ஒளி திகழ
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன் போல் என்பால் அன்பன் தன்பால்

காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே

திருச்சிற்றம்பலம்

இப்பாசுரம். சோமசுந்தரக் கடவுள் பாணபத்திரருக்கு உதவி புரிய வேண்டுமென்று சேரமான் பெருமான் நாயனாருக்கு எழுதியருளிய திருமுகம்.

புரிசை - மதில், கார்காலத்து மேகத்துக்கு ஒப்பாக, செருமா--போர்க் குதிரை.

## சேரமான் பெருமான்
## பொன்வண்ணத்தந்தாதி

பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக்குன்றம்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை தன்னைக் கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
ஆகிய ஈசனுக்கே

## நக்கீரதேவ நாயனார்

### கயிலைபாதி - காளத்திபாதி அந்தாதி

மற்றும் பல பிதற்ற வேண்டாம் மட நெஞ்சே
கற்றைச் சடை அண்ணல் களாத்தி-நெற்றிக்கண்
ஆரா அமுதின் திருநாமம அஞ்செழுத்தும
சோராமல். எப்பொழுதுஞ் சொல்

### திருஈங்கோய்மலை எழுபது

அடியும் முடியும் அரியும் அயனும்
படியும் விசும்பும் பாய்ந்தேறி-நொடியுங்கால்
இன்ன தென அறியா ஈங்கோயே ஓங்காரம்
அன்ன தென நின்றான் மலை

நொடியுங்கால் - செல்லும்பொழுது

உண்டிருந்த தேனை அறுபதங்கள் ஊடிப் போய்ப்
பண்டிருந்த யாழ் முரலப் பைம் பொழில் வாய்க் கண் டிருந்த
மாமயில்கள் ஆடி மருங்குவரும் ஈங்கோயே
பூமயிலி தாதை பொருப்பு

அறுபதங்கள் - வண்டுகள். பூமயிலி - அழகிய மயிலை ஊர்தியாகக் கொண்டமுருகன்

### திருவலஞ்சுழி-மும்மணிக்கோவை

தொம்பார் குளிர் மறைக் காடனை
வானவர் கூடி நின்று
நம்பா என வணங் கப்பெறு
வானை நகர் எரிய
அம்பாய்ந் தவனை வலஞ்சுழி
யானை அண்ணுமலை மேல்
வம்பார் நறுங் கொன்றைத் தாருடை
யானை வணங்குதுமே

### பரணதேவ நாயனார்
### சிவபெருமான் திருவந்தாதி

அடைந்துன் பால் அன்பாய் அணி மணி கொண்டர் சகித்
தடைந்துன் பால் மேலு குத்த மாணிக்-கடைந்துன் பால்
அவ்வமுதம் ஊட்டி அணிமலருஞ் சூழ்ந்தன்று
வவ்வமுத மாக்கிஞய் காண்

மாணிக்கு-சண்டிசருக்கு அமுதம் ஊட்டி-தன்னுடைய திருவமுதை பெறச்செய்து.

## பட்டினத்துப் பிள்ளையார்
## கோயில் நான்மணிமாலை

கனிவந் தமுதூறிக் கல்மனத்தை எல்லாம்
கசியும் படிசெய்து கண்டறிவார் இல்லா

வெளிவந் தடியேன் மனம் புகுந்த தென்றால
விரிசடையும் வெண்ணீறும் செவ்வானம் என்ன

ஒளிவந்த பொன்னிறமும் தொல் நடமும் காட்டும்
உடையான் உயர்தில்லை அம்பலமொன் றல்லால்

எளிவந் தினிப் பிறர் பாற் சென்றவர்க்குப் பொய் கொண்
டிடைமிடை ந்தபுன் மொழியால் இச்சை உரையோமே

## திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

வந்தி கண் டாய அடி யாரைக்கண்
டால்மற வாது நெஞ்சே

சிந்தி கண் டாய் அரசன் செம்பொற்
கழல் திரு மாமருதைச்

சந்தி கண் டாயில்லை யாயின்
நமன் தமர் தாங்சொடு போய்

உந்திக்கண் டால் நிர யத்துன்னை
வீழ்த்தி உழக்குவரே

## நம்பியாண்டார் நம்பி
## கோயில் திருப்பண்ணியர் விருத்தம்

உண்டேன் அவரருள் ஆரமிர்
தத்தினை உண்டலுமே

கண்டேன் எடுத்த கழலும்
கனலுங் கவித்தகையும்

ஒண்தேன் மொழியினை நோக்கிய
நோக்கும் ஒளி நகையும்

வண்தேன் மலர்த்தில்லை அம்பலத்
தாடும் மணியினையே

தென்மொழி - அம்பிகை

## ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி

கவிக்குத் தருவன கண்ணுக்கினியன கேட்கில் இன்பம்
செவிக்குத் தருவன சிந்தைக் குரியன பைந்தாளம்
நவிக்கண் சிறுமியர் முற்றில் முகந்ததும் சிற்றில் தொறும்
குவிக்கத் திரைபரக் கும் கொச்சை நாதன் குரைகழலே

## நம்பியாண்டார் நம்பி

## திருநாரையூர் விநாயகர் திரு இரட்டைமணிமாலை

என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் புன்னை
விரசு மகிழ சோலை வியன் நாரை யூர் முக்கண்
அரசு மகிழ் அத்திமுகத் தான்

விரசு-கலந்த

## விநாயகர் இரட்டை மணிமாலை

முகத்தாற் கரியன் என் றாலும்
தனையே முயன்றவர்கு
மிகத்தான் வெளியன் என் றேமெய்மை
உன்னும் விரும்படியார்
அகத்தான் திகழ்திரு நாரையூர்
அம்மான் பயந்த எம்மான்
உகந்தா னவன தன் உடலம்
பிளந்த ஒரு கொம்பனே

வெளியன்-வெளிப்படுகிறவன். உக-இறந்துவிழ. தானவன்-கயாமுகசுரன்.

## காரைக்கால் அம்மையார்

### திரு இரட்டைமணிமாலை

ஈசன் அவனல்லா தில்லை என நினைந்து
கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து-பேசி
மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்
பிறவாமைக் காக்கும் பிரான்

ஈசனுடைய திருவடிகளை மறவாது வாழ்வதே பிறவிச் சூழலிருந்து தப்புவதற்கு ஒரே.வழி

வேதியனை வேதப்பொருளானை வேதத்துக்(கு)
ஆதியனை ஆதிரை நன்னாளாச் சோதியான்
வல்லேன் மாய்ப்புக்கு மாலவனும் மாட்டாது
கில்லேன் மாஎன்றான் கீழ்

கில்லேன் அமா என்றான் – நான் ஆற்றலில்லாதவன் அம்மா என்றான், ஆதிரை நன்னாளானை - திருவாதிரை என்னும் விண்மீனுக்குரிய நாயகனான சிவனை. சிவபெருமான் திருவாதிரை நாளில் மூங்கிலில் தோன்றினார் என்று புராணம் கூறுகிறது தட்சிணாயனம் முடிந்து மறைந்து உத்தராயணம் தோன்றுதற்கு அறிகுறியாக இத்திருவிழா மார்கிழத் திருவாதிரையில் கொண்டாடப்படுகிறது. இதுவே சிதம்பரம் நடராசருக்கும் திருவாதிரைக்கும் உள்ள இயைபு. (மீ,ப.சோமு)

### அற்புதத் திருவந்தாதி

அன்றுந் திருவுருவங் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிரான்? என்பார்கட்கென் றுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் எது?

அன்றும்-ஆதியிலும் அதாவது இந்நிலையை நான் அடைவதற்கு முன்பே. இன்றும் இந்நிலையை இந்தப்பேய நிலையை அடைந்த நிலையிலும்,

அழலாட அங்கை சிவந்ததோ அங்கை
அழகால் அழல் சிவந்த வாறோ? –கழலாடப்
பேயாடு கானிற் பிறங்க அனலேந்தித்
தீயாடுவாய் இதனைச் செப்பு

கழலாட–வீரக்கழல்கள் ஆடும்படி. பிறங்க-விளங்க.

அருளே உலகெலாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானால் அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன எஞ்ஞான்றும்
எப்பொருளு மாவ தெனக்கு

அருளே – சிவபெருமானுடைய திருவருளே. மெய்ப்பொருளை– மெய்யான வீடுபேற்று நிலையை, இறைவனுடைய திருவருள் என்று எல்லாவற்றையும் நோக்குவார்க்கு ஆகாத பொருள் ஏதும் இல்லை என்றபடி,

## திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

ஒப்பினை யில்லவன் பேய்கள் கூடி
ஒன்றினை ஒன்றடித் தொக்கலித்துப்
பப்பினை யிட்டுப் பகண்டைபாடப்
பாடிருந் தந்நரி யாழமைப்ப
அப்பனை அணிதிரு ஆலங்காட்டுள்
அடிகளைச் செடிதலைக் காரைக்காற்பேய்
செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்
சிவகதி சேர்ந்தின்ப மெய்துவாரே

ஒக்கலிந்து-கூட்டமாகநின்று வெற்றிஒலிகள் எழுப்பி
பப்பினையிட்டு-பரவி வளையமாகச் சூழ்ந்து நின்று, மண்டலமிட்டு

## ஐயடிகள் காடவர்கோன்

குந்தி நடந்து குனிந்தொருகை கோல் ஊன்றி
நொந்திருமி ஏங்கி நுரைத்தேறி -வந்து ந்தி
ஐயாறு வாயாறு பாயா முன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை

## பட்டினத்தடிகள்
## கோயில் நான்மணிமாலை

களிவந்து அமுதூ றிக்கல் மனத்தை எல்லாம்
கசியும் படிசெய்து கண்டறிவார் இல்லா
வெளிவந்து அடியேன் மனம் புகுந்தது என்றான்
விரிசடையும் வெண்ணீறும் செவ்வானம் என்ன
ஒளிவந்த பொன்திறமும் தோல் நடமும் காட்டும்
உடையான் உயர்தில்லை அம்பலம்ஒன்று அல்லால்
எளிவந்து இனிப்பிறர்பால் சென்றவர்க்குப் பொய் கொண்டு
இடைமிடைந்த புன்மொழியால் இச்சைஉரையோமே

# பன்னிரெண்டாம் திருமுறை

## பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணம்

## சேக்கிழார் பெருமான்

### ஸ்ரீமந் நடராசர் துதி

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்;
நிலவு லாவிய நீர்மலி வேணியன்;
அலகில் சோதியன்; அம்பலத் தாடுவான்;
மலர்சி லம்படி வாழ்த்தி, வணங்குவாம்

### மானிடப் பிறவியின் பயன்

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்பொழில் தில்லையுள்
மாந டஞ்செய் வரதர் பொற் றாள் தொழ

### விநாயகர் வணக்கம்

எடுக்கும் மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத்தாழ் செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம்

### அவையடக்கம்

அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும்
அளவி லாசை துரப்ப அறைகுவேன்

### திருநாவுக்கரசு சுவாமிகள்

மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யார் நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்
காசினி மேற் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினால்
ஆசில் அறச்சாலைகளும் தண்ணீர்ப்பந்தரும் அமைப்பார்

காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலருக்கு வளம் பெருக நல்கியும் நானிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத ஈன்கவினைத் துறைநின்றார்

## அமர்நீதி நாயனர்

சிந்தை செய்வது நின்கழல் அல்லதெகன்றில்லார்
அந்தி வண்ணர்தம் அடியவர்க் கமுதுசெய்வித்துக்
கந்தை கீளுடை கோவணம் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால் வரும்பயன் கொள்வார்

## எறிபத்த நாயனர்

மல்லல் நீர் ஞானந் தன்னுள் மலவிடையுடையான் அன்பர்க்(கு)
ஒல்லைவந் துற்றசெய்கை உற்றிடத்துதவும் நீரார்
எல்லையின் புகழின் மிக்க எறிபத்தர் பெருமை எம்மான்
சொல்லலாம் படித்தன் றேனும் ஆசையால் சொல்லலுற்றேன

## இயற்பகை நாயனர்

......மிகக் கீழடியார்கள் யாரெனிலும் வேண்டும், யாவையும் இல்லை என்னாதே, இக்கடற்படி நிகழ முன் கொடுக்கும் இயல்பின் நின்றவர்: உலகியற பகையார்

செய்வதற் கரிய செய்கை செய்தநற் றொண்டர் போக
மைதிகழ் கண்டன் எண்தோள் மறையவன் மகிழ்ந்து நோக்கிப்
"பொய்தரும் உள்ளம் இல்லான் பார்க்கிலன் போனாள் என்று
மெய்தரு சிந்தை யானை மீளவும் அழைக்கலுற்றான்

"இயற்பகை முனிவா ஓலம்! ஈண்டு நீ வருவாய் ஓலம்
அயர்ப்பிலா தானே ஓலம்! அன்பனே ஓலம் ஓலம்!
செயகருஞ் செய்கை செய்த தீரனே ஓலம்" என்றான்
மயக்கறு மறைஒ விட்டு மையன் தேட நின்றான்

## திருநீலகண்ட நாயனர்

வேதியர் தில்லை மூதூர்
வேட் கோவர் குலத்து வந்தார்
மாது ஒரு பாகம் நோக்கி
மன்னு சிற்றம் பலத்தே

ஆதியும் முடிவும் இல்லா
அற்புதத் தனிக் கூத்து ஆடும்
நாதனுர் கழல்கள் வாழ்த்தி
வழிபடும் நலத்தின மிக்கார்

வேட்கோவர் - குயவர்

## இயற்பகை நாயனுர்

சென்னி வெண்குடை நீடு அநபாயன்
திருக்குலம் புகழ் பெருக்கிய சிறப்பின்
மன்னு தொல்புகழ் மருத நீர் நாட்டு
வயல் வளம் தர இயல்பினில் அளிந்துப்
பொன்னி நல் நதி மிக்க நீர் பாய்ந்து
புணரி தன்னையும் புனிதம் ஆக்குவது ஓர்
நல் நெடும் பெரும் தீர்த்தம்முன் உடைய
நலம் சிறந்தது வளம் புகார் நகரம்

சென்னி-சோழ (குலத்தில் தோன்றியிதலை மீதுமாம், தொல் புகழ்-பழைய புகழ் பொருந்திய

## தில்லை வாழ் அந்தனர்

கற்பனை கடந்த சோதி
கருணையே உருவ மாகி
அற்புதக் கோல நீடி
அருமறைச் சிரத்தின மேலாம்
சிற்பர வியோம மாகும்
திருச்சிற்றம் பலத்துள் நிறு
பொற்புடன் நடஞ்செய் கின்ற
பூங்கழல் போற்றி! போற்றி!

ஆதி ஆய் நடுவும் ஆகி
அளவுஇலா அளவும் ஆகிச்
சோதி ஆய் உணர்வும் ஆகித்
தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப்
பெண்ணும் ஆய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப்
பொது நடம் போற்றி போற்றி

## இளையான்குடி மாற நாயனர்

## அன்னம்பாலித்த அன்பர்

"அழுந்திய இடருள் நீங்கி
அடியனேன உய்ய என்பால்
எழுந்தருள் பெரியோய்! ஈண்டு
அமுது செய் தருள்க" என்று
தொழும்பனர் உரைத்த போதில்
சோதியாய் எழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாரும்
தொண்டரும் திகைத்து நின்ருர்

தொழும்பனர் – இளையான்குடி மாற நாயனர். மாலயன் காணாத சிவபெருமான் சோதியாய் எழுந்து தோன்றி நாயனர்க்கும் மனைவிக்கும் அருள் புரிந்தார்.

## மெய்ப்பொருள் நாயனர்

தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமாள் அன்பர்க்காவன ஆகும் என்று
நாடிய மனத்திேைடு நாயன்மார் அணைந்தபோது
கூடிய மகிழ்ச்சி பொங்க குறைவு அறக் கொடுத்துவந்தார்

மாடும்-பொன்னும். நீடுசெல்வமும்–பெருகியுள்ள மற்றசெல்வங்களும் சிவஞானமேமெய்ப்பொருள் ஏனையவெலாம்பொய்ப்பொருளேயாகும்

## திருநாவுக்கரசு சுவாமிகள்

அருள்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம்
அன்புசெறி கடலுமா மெனவும்! ஓங்கும்
பொருள் சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டெனவும்; புவனம் உய்ய
இருட்கடுவுண் டவர் அருளும் அகிலம் எல்லாம்
ஈன்றாள தன் திருவருளும் எனவும் கூடித்
தெருள்கலை ஞானக்கன்றும் அரசும் சென்று
செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தார் அன்றே

"திருஞானசம்பந்தரின் திருவடி வணங்கும் பேறு பெற்றேன் என்று மகிழ்ந்தார் நாவுக்கரசர். "திருநாவுக்கரசரை வணங்கும் பேறு பெற்றேன்" என்று உவந்தார் ஞானசம்பந்தர். இருவரும் திருக்கோபுரத்தை தொழுது கோயில் சேர்ந்தார்,

## பெருமிழலைக் குறும்ப நாயனுர்

நாலு கரணங் களும் ஒன்ருய்
நல்ல அறிவு மேற்கொண்டு
காலும் பிரம நாடிவழிக்
கருத்துச் செலுத்தக் கபால நடு
ஏலவேமுன் பயின்ற நெறி
எடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாதம்
அணைவார் கயிலை முன் அணைந்தார்

நாயனார் சிவயோக நெறி நின்றவராதலின், கருவி கரணங்களை ஒருமுகப்படுத்தி சுழுமுனை நாடி வழியே பிராணவாயுவைச் செலுத்தி பிரமந்திர வழியே சென்று மேலைப்பெருவெளி சார்ந்து கபாலத்தினை திறப்பித்து ஒளி வடிவாகத் திருக்கயிலாய மலையைச்சேர்ந்தார்.

## கண்ணப்ப நாயனுர்

அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்னும்
அவனுடைய அறிவெல்லாம் நமை அறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வரம் என்றும்
அவனுடைய நிலை இவ்வாறு அறி நீ என்றருள் செய்தார்

வடிவு, அறிவு, செயல், நிலை எல்லாம் என்பாலதே கண்டறிக என்றவர்று.

## கலி விருத்தம்

என்றும் இன்பம் பெருகும் இயல்பினுல்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்று உளார் அடியார் அவர் வான் புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம்

## வாழ்த்து

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாம்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே

## தக்ஷிணாமூர்த்தி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
ஆறங்கம் முதற்கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத்தொடக்கை வெல்லாம்

(பரஞ்ஜோதி முனிவர்)

## சின் முத்திரை

சுட்டுவிரல் நுனியைப் பெருவிரல் நுனியால் தொட்டும் ஏனைய மூன்று விரல்கள் விலகியிருப்பதும சின் முத்திரையாகும். இதை ஞான முத்திரை வியாக்யான முத்திரை என்றும் சொல்வதுண்டு.

தக்ஷிணாமூர்த்தியின் திருக்கரங்களில் ஞானத்தின் அடையாளமாகச் சின்முத்திரையும், தத்துவங்களை உணர்த்துவதாக குத்திராட்சமாலையும், பேரின்பத்தை அளிக்கும் அமிர்த கலசமும் தீ அல்து நாகமும் உள்ளன,

ஞானமூர்த்தியாகிய தக்ஷிணாமூர்த்தி (சிவன்) ஆலமரச் செல்வனாக அமர்ந்து சனகர், சனந்தனர், சநாதனர், சனத்குமாரர், ஆகிய நான்கு முனிவர்களுக்கும் வேதத்தின் அடிப்படை உண்மைகளை விளக்கி யோக நிஷ்டையின் தன்மைகளை உபதேசித்து அருளுவதும் உயர்ந்த தமது அனுபூதியையும் ஆனந்தத்தையும் மௌனத்தின் மூலம் வெளிப்படுத்தி, தம் சீடர்களின் உள்ளத்தில் ஆனந்தம் முழுவதையும் பரவச்செய்து, பேரின்ப நிலையை உணர்த்துவதே சின் முத்திரையின் அடையாளமாகும். இந்த முத்திரை ஞானத்தின் அடையாளம்,

சின் முத்திரை ஒருமலம் நீங்க இருமலங்கூட்டி அருமலம் மூன்றும் அகற்றி' ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கியபட்டிருக்கும் நிலையாகும்.

பெருவிரல் இறைவன் என்றும்; ஆள்காட்டி விரல் உயிர் என்றும்; இரண்டு விரல்களும் இணைந்து ஒருமைப்பட்டு வட்டமாக இருப்பது இறைவனுடன் இணைந்த ஆன்மா பேரின்பத்தில் திளைப்பதை உணர்த்துகிறது என்றும் கொள்ளவேண்டும்.

சின்முத்திரையிலுள்ள நடுவிரல்வினையையும், மோதிரவிரல் மாயையும் சிறுவிரல் மலத்தையும் உணர்த்துகின்றன. இந்த மூன்று விரல்களும் விலகி நிற்பது, உயிரை விட்டு நீங்கிய அவை மீண்டும் அந்த உயிருடன் சேரும் செயலற்ற நிலையை உணர்த்துகின்றன.

தூக்கிய மூன்று விரல்களும் பதி, பசு, பாசம் ஆகியவற்றைக் குறிப்பதாகவும் சொல்வதுண்டு.

## சோமாஸ்கந்தர்

ஏலவார் குழல் இறைவிக்கும் எம்பிரான் தனக்கும்
பாலன் ஆகிய குமரவேள் நடுவுறும் பான்மை
ஞால மேலுறும் இரவோடு பகலுக்கும் நடுவே
மாலை யானதொன்று அழிவின்றி வைகுமாறதொக்கும்

—கந்தபுராணம்

சிவாலயங்களில் எழுந்தருளும் திருவுருவங்கள் ஐந்து கணேசர், முருகன், சோமாஸ்கந்தர், அம்பிகை, சண்டேசர், இவற்றுள் தத்துவச் சிறப்புமிகுந்த தனித்தன்மை வாய்ந்தவடிவம் சோமாஸ்கந்தர் ஆகும். ஸஹ உமா ஸ்கந்தர் என்ற வடமொழிச் சொல்லுக்கு உமையுடனும் கந்தனுடனும் விளங்குபவர் என்று பொருள் அதாவது சிவபெருமான் தேவியுடனும் கந்தனுடனும் காட்சி தரும் அருட்கோலம். இறைவனை இல்லறத்தானாக — இனிய கணவனாக — பரிசமிக்க தந்தையாகத் தநயனுடன் காட்டும் இவ்வடிவம் களித்து மகிழ வேண்டிய கவின்மிகு கருணை உருவம் ஆகும்.

சச்சிதானந்தம் (சத்சித் ஆனந்தம்) சோமாஸ்கந்த மூர்த்தியின் தத்துவமாகும்.

| | | |
|---|---|---|
| சத்து | சித்து | ஆனந்தம் |
| உண்மை | அறிவு | இன்பம் |
| சிவன் | உமை | ஸகந்தன் |
| அருமை | எளிமை | அழகு |

சத்தாகிய சிவத்துக்கும் சித்தாகிய அம்மைக்கும் நடுவே ஆனந்தமே வடிவான கந்தனோடு விளங்கியமைந்த சோமாஸ்கந்தர் ஈசானத்தில் தோன்றியவராவர். இவரே சிவாலயத்தில் ஆட்சி செலுத்தும் பிரதான மூர்த்தியாவார்.

சோமாஸ்கந்தர் வடிவத்தைத் தொழுவார் இல்லறத்தில் நன் மக்களோடு நலப்பல துய்த்து மகிழ்வர் என்று கந்தபுராணம் பேசும்.

## சந்திரசேகரர்

நெற்றியிற் கண்ணுடை நிமலத் தெப்பிரான்
உற்றவர்க்கு அருள்புரி கின்ற உண்மையைத்
தெற்றென உணர்த்தல் போல் திங்களின் கலை
கற்றையஞ் சடைமிசைக் கவின்று பூத்ததே

-கந்தபுராணம்

தக்கன் மக்களைமணந்த சந்திரன், ரோகிணி என்பாளிடமே தனியன்பு காட்டி ஏனைய இருபத்தாறு மனைவியரையும் வெறுத்து ஒதுக்கினான். தம் மக்களின் நிலை கண்டு வருந்தி தக்கன் சினந்து சந்திரனைச் சபித்தான். அதனால் சந்திரன் நோயுற்றுத் தன் கலைகள் குன்றி மெலிந்தான். கழுவாய் (பிராயச்சித்தம்) தேடிச் சிவபெருமானிடம் அடைக்கலம் புகுந்து போற்றித் துதித்தான். மூன்றாம் பிறையளவாகத் தேய்ந்திருந்த சந்திரன், தன் காலில் விழுந்தது கண்ட சிவபெருமான் கருணை பொங்க அவனைத்தலையிலே சூடிக்காத்தார். அக்கணமே தக்கன் சாபம் பொய்த்தது.

தீர்ந்தன வன்றியே திங்கள் தன்னிடை
யார்ந்திடு கலையினை யங்கையாற் கொளா
வார்ந்திடு சடைமிசை வயங்கச் சேர்த்தினன்
சார்ந்தில தவ்வழித் தக்கன் சாபமே

என்று கந்தபுராணம் பேசுகின்றது.

பிறைசூடிய சிவபெருமான் கோலமே சந்திரசேகர் என்று போற்றப்படும். சிவாலயங்களில் மாதப் பிறப்பு–பிரதோஷம் அமாவாசை, பௌர்ணமி, முதலிய விசேஷ நாட்களில் சந்திரசேகர மூர்த்தியே எழுந்தருளி வலம் வருவார் மிகச்சிறிய வடிவில் சந்திரசேகரர் அமைக்கப்பெற்று நாடோறும் காலே, மாலே இரு வேலேகளிலும் ஸ்ரீ பலி சாதிக்க எழுந்தருளுவித்தல் சில கோயில்களில் மரபாக இருக்கும். இவரே பிரதோஷநாயகர் என்று எல்லாக் கோயில்களிலும் இடம் பெற்றிருப்பார்.

[வலேயபட்டி கிருஷ்ணன்



## எட்டாம் திருமுறை

*43ம் பக்கம் 9ம் வரி திருத்தம்*

சீலமின்றி நோன்பின்றிச்
    செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்
    சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி
    வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக்
    கொடியேன் என்றோ கூடுவதே

திருவாசகத்தின் கடைசிப்பதிகத்தை அச்சோப்பதிகம் என்ற பெயர் கொண்ட 51ம் பதிகத்தை தன்றிச்செலுத்தும் பதிகமெனக் கூறலாம். திருவாசகமென்ற மாலேக்கு அது பதக்கம் போன்ற ஒரு அணி, அதன் பாடல்கள் எல்லாம்

அத்தன்! ஐயன்! அம்மை!எனக்கு
அருளியவாறு யார் பெறுவார் அச்சோவே

| | பிழை | திருத்தம் |
|---|---|---|
| வரி 1 | பாடலா | பாடலோ |
| வரி 19 | வள்ளுவர் | வண்ணம் |
| வரி 21 | அத்தனெக | அத்தனெனக் |
| பக்கம் 42 வரி 5 | தொண்டர்கான் | தொண்டர்காள் |
| | பத்தர்கான் | பத்தர்காள் |
| ,, 40 வரி 6 | நாட | நாடி |

## கோட்டூர் அகத்திஸ்வரர்

*சதாவதானம் சுப்பிரமணிய ஐயர்*

### அகத்தீசர்

சீர்பூத்த மணிமருமத் தேர்பூதத்
நரை விடையான் தேவர்க் காப்பர்ன்
கார்பூத்த களமுடையான் வார்பூத்த
சிலைப்பூட்டிக் காப்பாப் பூண்ட
பார் பூத்த பணிவுடையா னிர் பூத்த
வளக்கோட்டூர்ப் பதிவாழ் வேணி
யார் பூத்த மலரிதழித் தார்பூத்த
வகத்தீச னடிகள் போற்றி

### சவுந்தரநாயகி

ஒருமலையைக் குடையாக்கிப் பசுப்புரந்தாற்
கிளையாளென் றுலகம் போற்ற
வொரு மலையைச் சிலையாக்கிப் புரப்பொடித்தா
னிடம் பிரியா துறைந்து தென்பா
லொருமலையைக் குறு முனிவன் பெறவருளாற்
றந்தையென வுயர் நீ கார
வொருமலையைப் பெற்றுதித்த சவுந்திர நா
யகி மலர்த்தாள் உள்ளம் வைப்பாம்

வேதம் யாவும் விளம்பி யுணர் வருஞ்
சோதி யேசுடர் தூமணி யேயுமை
நாத னேபுவ னங்க ளனைத்திற்கு
மாதி யேயெம் மகத்தீச போற்றியே

போற்றி சங்கர பூதங்க ளுயக
போற்றி மூன்று புரங்கள் பொடித்தவ
போற்றி தற்பர புண்ணிய மூர்த்திய
போற்றி கோட்டூர்ப் புராதன போற்றியே



# 'அண்ணுமலையாரின் அடிக்கமலம்'

சக்தி நகர் ஆர், கோபாலரத்தினம்
செய்யாறு தி. ச. மாவட்டம்

'இறைவன் ஒருவனே. அவன் திருநாமங்களோ அளவிட முடியாதவை. வேதங்கள் இறைவனைத் தியானத்திற்கு உரிய உருவம் உடையவனாகவும், எங்கும் நிறைந்தவனாகவும், உருவம் அற்றவனாக வும், ஆதியும் அந்தமும் நடுவும் இல்லாத அகண்டாகார சொரூபமாகவும் வர்ணனை செய்கின்றன.

ஆண்டவனை ஆகமங்கள் செயல் வடிவத்திலும், புராணங்கள் கதை வடிவத்திலும் நமக்கு தெரிவிக்கின்றன.

உலகைப் படைத்தவன் பிரமன். உலகில் உள்ள எண்ணற்ற உயிர்களையும், ஜீவராசிகளையும் படைப்பதால் ஒரு சமயம் அவனுக்கும் ஆணவம் ஏற்படுகிறது. ''உலகத்தையே படைத்தவன் நான் தான். நானே பெரியவன்'' என்று திருமாலிடம், பிரமன் பெருமை அடித்துக் கொண்டான்.

உடனே திருமாலோ, ''என் நாடிக் கமலத்தில் உதித்தவன் நீ, ஆதலால் நானே உன்னைத் தோற்றுவித்த தந்தை எனவே, யாமே முதல்வன்'' என பகன்ருர்.

இதனைக் கேட்ட நாரதர், ''நீங்கள் இருவரும் முதல்வர்கள் இல்லை. பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானே 'முதல் கடவுள்'' என்று பகன்ருர்.

இவர்களுடன் நடந்த விவாதம் தன்னேரிலா தலைவனாம் சிவபெருமான் சிந்தையில் தோன்றியது. இவர்களின் பேதமையைப் போக்கவேண்டி அவர் உருத்திர அக்கினி வடிவமாக இருவருக்கும் இடையே தோன்றி அருளினர்.

உங்களில் யார் என் அடியையும் நுனியையும் முதலில் கண்டு வருகின்றீரோ அவரே முதன்மையானவர்'' என்று அசரீயாய் ஒலிக்க அடி முடி தேடும் படலம் ஆரம்பமாயிற்று.

திருமால் வராகம் உருவெடுத்து, பாதாளம் வரை நோக்கி குடைந்து சென்ருர். சிவனின் சோதி சொரூபம் ஆழமாக சென்று கொண்டே இருந்தது. வராகம் சக்திஇழந்து அதற்கு மேலும் குடைந்து

செல்ல இயலாமல் தோல்வியை ஒப்புக் கொண்டது. அதாவது இறைவனின் அடியை அதனால் கண்டு பிடிக்க இயலவில்லை,

பிரம்மா அன்னப்பறவை உருவெடுத்து சோதியின் உச்சியை நோக்கிப் பறந்தது. சோதியின் வெப்பம் தாங்காமல் சிறகுகள் எரிந்து மூர்ச்சையாகிக் கீழே விழுந்தது. விழும் வழியில், சிவன் சிரசில் இருந்து உதிர்ந்த ஒரு தாழம்பூ இதழைக் கண்டதும் அதற்கு ஒரு எண்ணம் ஏற்பட்டது. அதனைத் தனக்கு சாதகமாக சாட்சி சொல்ல ஏற்பாடு செய்து கொண்டது. அதன்படி சிவன் முடியைத்தான் கண்டுவிட்டதாகவும், சாட்சியாக தாழம்பூவையும் காண்பித்தது. பொய் கூறியதால் பிரமனுக்கு உலகில் ஆலயங்களே இல்லாமல் போகச் சாபம் கிடைத்தது. பொய் சாட்சிக்கு (அக்காலத்திலேயே) துணை நின்றதால் தாழம்பூ சிவபெருமானின் அர்ச்சனை மலர்களிலிருந்து விடுவிக்கப்பட்டது. இதனால் தான் இன்று வரை பிரமனுக்கு எங்கும் தனியாக கோயில்கள் ஏற்படுத்தப்படுவதில்லை. அதேபோல சிவனை அர்ச்சனை செய்வதற்கு தாழம்பூவை சேர்ப்பதுமில்லை,

தங்களுடைய அறியாமையை உணர்ந்து பிரமனும், திருமாலும் சிவனை வணங்கி நின்றார்கள். இறைவன் லிங்கோற்பவராகச், சோதி வடிவமாக காட்சி தந்து அருளினர். அந்த தலமே திருவண்ணாமலை என்கிற திருத்தலமாகும் ''ஆணவத்தால் அடைய முடியாத இறைவனை அவனதுஅருளை நினைந்து, பக்தியால் அடைய முடியும்'' என்கிற தத்துவத்தைவிளக்கி கொண்டிருக்கும் அருமையான சிவத்தலமாகும்.

பிரமாவுக்கும், திருமாலுக்கும் லிங்கோத்பவராய்க் காட்சி அளித்த தலம் திருவண்ணாமலை ஆகும். சிவன் சோதிப்பிழம்பாய் ஆதி அந்தம் இல்லாமல் வியாபித்த உருவத்தைத் தேவர்கள் தாங்க மாட்டாமல் அலற, இறைவனின் கருணையால் மலையாகி நின்று விட்டதாகப் புராணங்கள் கூறுகின்றன. இந்த ஐதீகத்தை திருவண்ணா-மலை சிவாலயத்தின் உள்ளே மேலக் கோபுரத்தின் தென்புறத்தே உள்ள ஒரு சன்னதியில் இன்றும் காணலாம். ஒரு பெரிய லிங்கத்தின் மேலே பிரம்மா அன்னமாகவும், கீழே திருமால் 'வராகமாகவும் இருக்கின்றனர். இடையே சிவன் உமையவளுடன் காளை வாகனத்தில் காட்சியளிப்பது அற்புதமான காட்சியாகும். இந்த சன்னதிக்கு 'தூல சூட்சுமலிங்கம்' என்று பெயர். தற்போது கல்லாக விளங்கும் பூமியானது முன்பு ஒரு காலத்தில் நெருப்பு கோளங்களாக இருந்து குளிர்ந்து கொண்டே வந்தது என்கிற அறிவியலாளர் கூற்றும் இதனை உறுதிப்-படுத்துகிறது. இந்தியாவில் மிகப் பழமையான தென்னாட்டில் இந்த அற்புதம் நிகழ்ந்துள்ளது என்பதையும், திரு அண்ணாமலைப்பதி ஒரு காலத்தில் அனல் பிழம்பாக இருந்து கருணையால் குளிர்ந்து மலையாகி விட்டது என்பதிலும் யாதும் சந்தேகமேயில்லை.

''ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெறும் ஜோதியை யாம் பாடக் கேட்டேயும்'' என்று மணிவாசகப் பெருமானும், ''தீப மங்கள சோதி, நமோ நமோ'' என்று அருணகிரிநாதரும், வடலூர் இராமலிங்க சுவாமிகளும், ''அருட்பெரும் சோதி அருட்பெரும் சோதி தனிப்பெரும் கருணை அருட்பெரும் சோதி' என்று சேர்ந்தே வழிபடுகிறார்கள்.

இவ்வளவு தத்துவங்கள் அடங்கிய ஜோதி வழிபாட்டைவிளக்கி நிற்கிறது. அண்ணாமலை! கார்த்திகை மாதத்தில் மலையின் உச்சியின் மேல் தீபத் திருவிழா நடைபெறுவதும் இதே கருத்தை உணர்த்துவது ஆகும்.

அண்ணாமலையைப் பூமியின் மத்திய பாகம் என்று புராணம் வர்ணிக்கிறது. பஞ்சபூதத் தலங்களில் இதைத் தேயு (நெருப்பு) எனக் கூறுகின்றனர். இது நினைத்தாலே முக்தி தரும் தலமாக விளங்கி வருகிறது. இப்புனித மலை எவ்வளவோ தபோவனர்களுக்குப் புகலிடம் கொடுத்துள்ளது. கௌதம முனிவர் தவம் புரிந்துள்ளார். அருணகிரி யோகி சித்தர், மகான் ரமண மகரிஷி, குரு நமசிவாயர், விருபாட்சதேவர் திருப்புகழ் பாடிய அருணகிரி நாதர், சேஷாத்ரி சுவாமிகள் போன்ற உலகப் புகழ் பெற்ற மகான்களும் அவர்களில் சிலராகும். இன்னும எவ்வளவோ சித்தர்கள், மகான்கள் உலவும் திருவிடமாக அது திகழ்கிறது.

''இம்மலையைச் சுற்றி அடிப்பாகத்தில் கிரிப்பிரதட்சணம் வருவது முக்தி அளிக்கும் சாதனம் என்று ரமண மகரிஷி அளித்துள்ள, தெய்வ வாக்கு, இன்னும் பக்தர்களிடையே கிரிவலம் மிகப்பிரபலமாக நடந்து வருவதும் பயனடைவதும் உண்டு.

நமது முன்னோர்கள் இந்தபூமியை ஐந்து பெரும் பிரிவுகளாகத் தான் பிரித்துள்ளனர். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பது ஆகும். இதனை மண், நீர், தீ, வளி, வான் என்று தமிழ் வாக்கியங்கள் கூறும். ஒவ்வொரு நிலைக்கும் ஒரு புனிதத் தலம் கண்டு நியமித்தார்கள்

1. பிருதிவித் தலமாகக் — காஞ்சிபுரம், திருவாரூர்
2. அப்புத்தலமாக — திருவானைக்கா
3. தேயுத் தலமாக — திருவண்ணாமலை
4. வாயுத் தலமாக — திருக்காளத்தி
5. ஆகாயத்தலமாக — சிதம்பரம்

நமது முன்னோர்கள் ஏற்படுத்திய திருத்தலங்களில் '*தீ*' என்ற சோதியை வணங்கவே திருவண்ணாமலைத் தலம் ஏற்பட்டது.

''அழலாகிய அண்ணாமலை அண்ணாள்''

சிவனே நெருப்பாகி விட்டானாம். திருவண்ணாமலைத் தலத்தின் தத்துவமே இந்தத் தீப சோதியில் தான் அடங்கி உள்ளது.

உலகத்தின் மேன்மைக்காக சுமேரு மலையின் உச்சியிலே சிறந்த யோக நிலையில் அமர்ந்திருப்பவரும், சூரிய சந்திரர்களை இரு கண்களாக உடையவரும், உமையுடன் கூடியவரும், ஆதரவுடன் மேன்மை அளிக்கக்கூடிய உதய சந்திரனுக்குத் திருவை அளிக்கக் கூடியவரும், சடைமுடி தரித்தவருமான சதாசிவனை நாம் வணங்க வேண்டும்.

*பைம்பொனே ! பவளக் குன்றே !*
*பரமனே ! பால் வெண் நீற்றாய் !*
*செம்பொனே ! மண் செய் பாதா !*
*சீர்தரு மணியே ! மிக்க*
*அம்பொனே ! கொழித்து வீழும்*
*அணி அணா மலையு ளானே !*
*எப்பொனே ! உன்னை அல்லால்*
*ஏது நாற் நினைவிலனே !*

அப்பர் தேவாரம்

*தேடிக் காணார் திருமால்*
*பிரமன் தேவர் பெருமானை*
*முடி ஓங்கி முதுவேய்*
*உகுத்த முத்தம் பலகொண்டு*
*கூடிக் குறவர் மடவார்*
*குவித்துக் கொள்ள வம்மின் என்று*
*ஆடிப் பாடி அளக்கும்*
*சாரல் அண்ணா மலையாரே*

திருஞான சம்பந்தர் தேவாரம்

*அண்ணாமலை மேல் அணி மலையை*
*ஆரா அன்பின் அடியவர் தம்*
*கண்ணார் அமுதை விண்ணோர்க்*
*காகிகக் கடலில் வந்து எழுந்த*
*உண்ணா நஞ்சம் உண்டானைக்*
*கும்பிட்டு உருகும் சிந்தையுடன்*
*பண்ணார் பதிகத் தமிழ்பாடிப்*
*பணிந்து பரவிப் பணி செய்தார்*

சேக்கிழார் பெரியபுராணம்

## தாயுமான அடிகள்

### உடல் பொய்யுரவு

நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளேன்
சொல்லாப் பொருட்டிரனைச் சொல்லாதே – கல்லாத
சிந்தை குழைந்து சுகஞ் சேரக் குருவருளால்
வந்தவழி நல்ல வழி

### ஆகாரபுவனம் - சிதம்பர ரகசியம்

அருள் பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
ஆரமிர்தே என் கண்ணே அரிய வான
பொருள்னைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே புனித வாழ்வே
கருதரிய கருத்தறுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும் வகுத்துக் கருவியாகி
விரிவினையுங் கூட்டி உயிர்த் திரளையாட்டும்
விழுப்பொருளே யான் சொல்லும் விண்ணப்பங்களே

### ஆசையெனும்

தந்தை தாயுநீ என்னுயிர்த் துணையுநீ சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவு நீ உனையலால் மற்றொரு துணைகாணேன்
அந்தம் ஆதியும் அளப்பருஞ் சோதியே ஆதியே அடியார்தஞ்
சிந்தை மேவிய தாயுமானவனெனுஞ் சிரகிரிப்பெருமானே

### பராபரக் கண்ணி

அன்பைப் பெருக்கி எனது ஆருயிரைக் காக்க வந்த
இன்பப் பெருக்கே இறையே! பராபரமே!
பாராயோ என்னை முகம் பார்த்து ஒருகால் என் கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே!
எண்ணாத எண்ண மெலாம் எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே!
சொல்லும் பொருளும் அற்றுச் சும்மா இருப்பதற்கே
அல்லும் பகலும் எனக்கு ஆசை பராபரமே
கொல்லா விரதம்! குவலயம் எல்லாம் ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவது என் இச்சை பராபரமே!

## ராமலிங்க சுவாமிகள் திருவருட்பா

# மஹா தேவமாலை

மலைமேலும் கடல்மேலும் மலரின் மேலும்
வாழ்கின்ற மூவுருவின் வயங்கும் கோவே
நிலைமேலும் நெறிமேலும் நிறுத்துகின்ற, நெடுந்
தவத்தோர் நிறைமேலும் நிகழ்த்தும் வேதக்
கலைமேலும் எம்போல்வார் உளத்தின் மேலும்
கண்மேலும் தோள்மேலும் கருத்தின் மேலும்
தலைமேலும், உயிர்மேலும் உணர்வின்மேலும், தகும்
அன்பின் மேலும் வளர் தாண் மெய்த் தேவே.

பொற்குன்றே அகம்புறமும் பொலிந்து நின்ற
பூரணமே ஆரணத்துட் பொருளே என்றும்
கற்கின்றோர்க்கு இனிய சுவைக் கரும்பே தான
கற்பகமே கற்பகத்தீங் கனியே வாய்மைச்
சொற்குன்றா நாவகத்துண் மாறா இன்பம்
தோற்றுகின்ற திருவருட் சீர்ச் சோதியே விண்
நிற்கின்ற சுடரே அச்சுடருள் ஒங்கும்
நீளொளியே அவ்வொளிக்குள் நிறைந்த தேவே.

தேசு விரித்து இருளகற்றி என்றும் ஓங்கித்
திகழ்கின்ற செழுங்கதிரே செறிந்த வாழ்க்கை
மாசுவிரித் திடுமனத்திற் பயிலாத் தெய்வ
மணிவிளக்கே ஆனந்த வாழ்வே எங்கும்
காசு விரித்திடும் ஒளிபோல் கலந்து நின்ற
காரணமே சாந்தமெனக் கருதா நின்ற
தூசுவிரித்து உடுக்கின்றோர் தம்மை நீங்காச்
சுகமயமே அருட்கருணை துலங்குந் தேவே.

கோவே என் குணக்குன்றே குன்றா ஞானக்
கொழுந்தேனே செழும் பாகே குளிர்ந்தமோனக்
காவேமெய் அறிவின்ப மயமே என்றன்
கண்ணேமுக் கண்கொண்ட கரும்பே வானத்
தேவே அத்தேவுக்குந் தேவிய வொண்ணுத்
தெய்வமே வாடாமல் திகழ்சிற் போதப்
பூவே அப்பூவிலுறும் மணமே எங்கும்
பூரணமாய் நிறைந்தருளும் புனிதத் தேவே.

# சாக்தம் [சக்தி சமயம்]



## சரஸ்வதி துதி

நான்முக னாவின் மேவி நான்மறை வடிவாயின்னந்
தானரும் பொருள்க டோதடக்கையின் முறையுந்தாங்கித்
தேனவர் கமலப் போதிற் செழித்துவீற் றிருக்கும் அம்மை
கான்மலர் போற்றி நாளுஞ் கருத்துற வணக்கஞ் செய்வாம்

சிவ ரகசியம்

நாடும் பொருட்சுவை சொற்சுவை
தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள்
வாய்பங்க யாசனத்திற்
கூடும் பசும்பொற் கொடியே
கனதனக் குன்று மைம்பாற்
காடுஞ் சுமக்குங் கரும்பே
சகல கலாவல்லியே

(குமரகுருபரர்)

## திருமகள் துதி

திரண்டு முனிவர் இருபாலுஞ் சிறந்து தினமுஞ்சேவிப்ப
வரந்தந் தருளும் பெண்கொடியை வடிவேற்குமரன் மணக்கோலம்
புரிந்த அழகை இருவிழிக்கு விருந்தா யருந்தும் புத்தமுதைப்
பரங்குன் றமர்ந்த செழுந்திருவைப் பணிந்து

திருவைப்பொருந்துவாம்

## ஸ்ரீ அகிலாண்டநாயகி துதி

உன்னைவிட வேறெனக்கு உற்ற துணை உண்டோ?
இன்னே நான் வாட்டமுற்று இருப்பது உனக்கழகோ?
பண்ணரிய வேதப் பழம்பொருளே! பங்கயத்தின்
அன்னமே! தென்காவு வாழ் அகிலாண்டவளே

## சுசீந்தரம்

திங்கள் உன் கருணை காட்டும்
தீக்கண் உன் வெகுளி காட்டும்
கங்கை உன் பெருமை காட்டும்
கருவும் உன் ஆண்மை காட்டும்
சிங்கம் நுண் இடையைக் காட்டச்
சிறை அனம் நடையைக் காட்டும்
மங்கையோர் பாகா தாணு
மால் அயா சுசிந்தை வாழ்வே

(கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை)

## அபிராமி அந்தாதி

ஆனந்தமாய், என் அறிவாய், நிறைந்த அமுதமுமாய்
வான் அந்தமான வடிவுடையாள், மறை நான்கினுக்கும்
தான் அந்த மான சரணார விந்தத் தவள நிறக்
கானம் தம் ஆடரங்காம் எம்பிரான் முடிக்கண்ணியதே

க்ண்ணியது உன்புகழ் கற்பது உன் நாமம்; கசிந்துபத்தி
பண்ணியது உன் இரு பாதாம் புயத்தில்; பகல் இரவா
நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து; நான் முன்செய்த
புண்ணியம் ஏது? என் அம்மே! புவி ஏழையும் பூத்தவளே!

## திருவாடானைப் புராணம்

தவள மெல்லிதழத் தாமரைக் கோயிலிற்
பவள மெல்லிதழப் பாளிறப் பூண்முலை
துவளு மெல்லிடைப் புத்தகத் தோன்றுகை
அவளை நாளும் அடிபணிந்தேத்துவாம்

## வைரவன்கோயில் ஸ்ரீ வடிவுடையநாயகி

அத்திரியுத் தகளைக் கலையாக
அணிந்து களிப் புறுவோன்
ஐயந்தம்மின் தெரிவை யிரென்ன்
அகந்தொறு மேற்றுண் போன்
நத்துடி சுடலையினடலையை என்று
நயந்து தரித் திடுவோன்
நாணில லென்பு, புனைந்து, பிசாசொடு
நாளு நடம்புரிவோன்
இத்தகு பித்தனை ஒரு காலம்மியில்
ஏற்றிய கையால் தொட்டு
இட்ட தவத்தால் தேவரின் மூவரின்
எற்றமுறச் செய்தாட்
சக்தி பராபரை வடிவுடை நாயகி
தாலோ! தாலேலோ!
தனிகர்கள் பரவிய வயிரவ பதியினள்
தாலோ! தாலேலோ!

நடராசக் கவிராயர்

"அன்னையே சிவபெருமான் யானைத்தோலை ஆடையாக அணிந்து வீடு தோறும் பிச்சை கேட்டு வாங்கி புசித்து வாழுபவன் காட்டில் பிசாசுகளோடு நடனம் செய்யக் கூடியவன். உலகத்தாரால் பித்தனென்று அழைக்கப்பட்ட இப்பெருமான், உன்னைத் திருமணம் செய்துகொண்டு அம்மி மிதிப்பதற்காக உன் திருவடியைப்பற்றினுன் உன் திருவடியைத்தீண்டிய பெருமை மும்மூர்த்திகளில் முதல்வனுக அப்பெருமான விளங்கும்படி செய்து விட்டாயே! உன் கருணையே கருணை என்கிறார், கவிராயர்

மங்கை நாயகியே போற்றி
மாமறைப் பொருளே போற்றி
சிங்க வாகனத்தின் மேவுந்
தேவியே போற்றி போற்றி
துங்கமாம் இமயம் ஈன்ற
தோகையே போற்றி மேலாம
நங்கையே கயிலை வாழும்
நாதர்நா யகியே போற்றி

(சிவ ரகசியம்)

# ஸ்ரீ காமாட்சியம்மன் துதி

## ஆசிரிய விருத்தம்

பொய்ப்பிள்ளை சிறுபிள்ளை நெறியில் நில் லாப்பிள்ளை
பொல்லாத பிள்ளை நின்னைப்
போற்றியறி யாப்பிள்ளை மாற்றம் உரை யாப்பிள்ளை
புன் பிள்ளை வன்பிள்ளை நோய்
மெய்ப்பிள்ளை பேய்ப்பிள்ளை மெத்த ஏழைப்பிள்ளை
வீண்பிள்ளை யென்றென்னை நீ
விட்டுவிடல் ஒண்ணாது பிள்ளைகளில் அன்னைக்கு
வேண்டாத பிள்ளையுண்டோ?
தைப்பிள்ளை மதிதவழ் சடைப்பிள்ளை வேய்ப்பிள்ளை
சதுர்மறைப் பிள்ளை சங்கு
சக்ராயு தப்பிள்ளை காணாத ஏகம்பர
தம்பங்கில் விளையாடும் ஓர்
மைப்பிள்ளை பச்சைக்கி ளிப்பிள்ளை கச்சியில்
வளர்ந்தபெண் பிள்ளையெனவே
மாட்சிபெறு காட்சி தரு சூட்சியரு ளாட்சிவா
மாட்சிகா மாட்சி யுமையே

(பழைய திருப்பதிகம்)

சரத்கால வெண்மதிபோல் திகழும் நின் மேனி
சடைமுடியில் பிறைமதியும் மணிமுடியும் சூடி
கரங்களிலே புத்தகம்வெண் ஜபமாலை கொண்டு
கருணை அருள் வரம் தந்து அபயமதும் தருமே
சிரம் தாழ்த்தி ஒருமுறை நின் சேவடியைத் தொழுதே
சிந்திக்கும் கவிவாணர் சிந்தையினில் நீயே
சரமழைபோல் தேன் தீம்பால் திராட்சையிலும் இனிதாய்
சத்தியமாம் சொற்கள் தமை சமைத்திடுவாய் தாயே

(அழகு வெள்ளம்)

சொல்லுக்கும் சிந்தைக்கும் எட்டாத ஞானச் சுடர்விளக்கே
நெல்லுக்கும் நீருக்கும் பேர் பெற்ற சோணாட்டின் நேத்திரமே
கல்லுக்கும் டேரைக்கும் கர்ப்பத் துயிர்க்கு மெய்க்காப்பளிப்பாம
மல்லுக்கும் அஞ்சா வடமுல்லை வாயில் வாழ்வைணவியே

(ஸ்ரீ வைஷ்ணவி சந்நிதி முறை)

## ஸ்ரீ மீனாக்ஷி அம்மன் துதி

உருகி உருகி நெக்கு நெக்குள்
உடைந்து கசிந்திட்டு, அசும்பூறும்
உறுவல் அனபிற் பழவடியார்
உள்ளத் தடத்தில் ஊற்றெடுத்துப்
பெருகி டரமானந்த வெள்ளப்
பெருக்கே சிறியேம் பெற்ற பெரும்
பேறே! ஊறு நறைக் கூந்தல்
பிடியே! கொடி நுண் நுசுப்பு ஒசிய்
வருங்குங்குமக் குன்றிரண்டேந்தும்
மலர்ப்பூங் கொம்பே தீங்குழலின்
மதுரங் கலந்த பதங்குதலை
மழலையரும்பச் சேதாம்பல்
முருகு விரியும் செங்கனிவாய்
முத்தந் தருக! முத்தமே
முக்கட் சுடர்க்கிடு விருந்திடுமும்
முலையாய் முத்தந் தருகவே

(குமரகுருபர சுவாமிகள்

நதி உண்ட கடலெனக் சமயத்தை உண்டபர
ஞான ஆனந்த ஒளியே!
நாதாந்த பேமே வேதாந்த மோனமே
நரளெனும் அகந்தை தீர்த்தென
மதி உண்ட மதியான மதிவதன வல்லியே
மதி சூதனன் தங்கையே!
வனராச னுக்கிருகண் மணியாய உதித்தமலை
வளர்கா தலிப்பெண் உமையே!

(தாயுமானவர்

மணிமலையின் சுடர்க்கொடியே பார்வதி நின் இதயப்
பாற்கடலின் வடிகாலோ பணிங்கொத வாணி
நனிசிறக்க வாக்கருளி நானிலமே வாழ
நல்லதொரு சுரநதியாய் நின்றகிற்பாலனுள்
களிவுடைய தாயேநின் நகிர்பாலை உண்ட
கவணியறும் சிவஞானப்பெரும் புலமையுற்று
தனியுறு நன்மணம் நிறைந்தே எவர் மனமும் கவரும்
தவக்கவிஞன் ஆகிவிட்டான் தாயே நின் அருளே

(சௌந்தர்யலஹரி

## சிவகாமி அம்மையார்

பரந்தபரா பரைஆதி பரனது இச்சை
பரஞானம் கிரியைபர போக ரூபம்
தரும் கருணை உருவாகி விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்த உபா தானங்கள் மேவி ஒன்ருய்
விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்து
அரந்தைகெட மணிமன்றுள் ஆடல்காணும்
அன்னை அருட் பாதமலர் சென்னி வைப்பாம்

## கீதாஞ்சலி

ரவீந்திரநாத் தாகூர்
தமிழாக்கம்: V. RM. செட்டியார்

### நீயே ஆகாசம், நீயே கூடு

என் அழகனே! கூட்டினுள்ளே ஆத்மாவை வர்ணங்களாலும் சப்தங்களாலும் வாசனைகளாலும் வளைத்துக் கொள்வதும் உன் அன்பே!

காலையாகிய கன்னி, பூமிதேவிக்குச் சூட்ட வேண்டிய அழகென்னும் மலர் மாலையுடன் பொன்மயமான குடலையை வலக் கரத்தில் தாங்கிய வண்ணம் வந்து நிற்கிருள்.

அந்தி மாலையில், ஆடுகளும், மாடுகளும் வீடு திரும்பிச் சென்ற பின், புல் நிறைந்த பலவெளிகளைக் கடந்து, சுவடு தெரியாத பல பாதைகளின் வெளியே சந்தியா தேவியும் வருகிருள். மேலைக்கடலில் இருந்து அவள் தன் பொற்குடத்தில் குளிர்ந்த சாந்திநீரை மொண்டு வந்து வையமெல்லாம் வீசுகிருள்.

ஆனல் ஜீவன் சிறகடித்துப்பறக்கவேண்டிய எல்லையற்ற வான வெளியோ ஒளிமயமாகத் திகழ்கிறது. அங்கே பகலில்லை, இரவில்லை உருவில்லை, நிறமில்லை, ஒலிக்கின்ற சொல் ஒன்று கூட இல்லை.

---

*சேவை செய் - அன்பு செய் - அநுபூதி அடை*

சுவாமி சிவனாந்தா

ஸ்ரீ



# வைஷ்ணவம் [விட்டுணு சமயம்]

## திவ்வியப்பிரபந்தம் முதலாயிரம்

### பல்லாண்டு பல்லாண்டு

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்து ஆண்டு
பலகோடி நூறு ஆயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்
சேவடி செவ்வி திருக்காப்பு

– பெரியாழ்வார்

### திருவாய்மொழி

திருமாலிருஞ் சோலைமலையே! திருப்பாற் கடலே! என் தலையே
திருமால் வைகுந்தமே! தண் திருவேங்கடமே எனது உடலே
அருமா மாயத்து எனது உயிரே! மனமே வாக்கே! கருமமே
ஒருமா நொடியும் பிரியான் என் ஊழி முதல் ஒருவனே

ஊழி முதல்வன் ஒருவனே என்னும் ஒருவன் உலகெல்லாம்
ஊழி தோறும் தன்னுள்ளே; படைத்துக் காத்துக் கெடுத்துழலும்
ஆழிவண்ணன் என்னம்மான் அந்தண் திருமாலிருஞ்சோலை
வாழி மனமே! கைவிடேல்! உடலும உயிரும் மங்கவொட்டே!

### திருக்கண்ணபுரம்

பாதம் நாளும் பணிய, தணியும் பிணி;
ஏதம் சாரா! எனக்கேல் இனி என் குறை!
வேத நாவர், விரும்பும் திருக்கண்ணபுரத்து
ஆதியானை அடைந்தார்க்கு அல்லல் இல்லையே

- நம்மால்வார்

"எழிலுடைய வம்மனைமீர் என்னரங்கத் தின்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
எழுகமலப் பூவழகர் எம்மானார் என்னுடைய
கழல் வளையைத் தாமும் கழல் வளையே யாக்கினரே"

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிறைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழி நான்

– ஸ்ரீ ஆண்டாள்

அருமறை முதல்வனை ஆழி மாயனை
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனை
திருமகள் தலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்

- வில்லிபுத்தூரார்

சீர்பூத்த பரஞ்சுடராய்ச் சித்தாகிக் கானவிடை
ஏர்பூத்த தென் உலகம் நிறைந்தொளிதன் பால் தோன்ற
ஏர்பூத்த முத்தொழிலும் இனிதியற்றித் தனிநின்ற
கார்பூத்த திருமேனிக் கடவுள் மலர் அடிபணிவாம்

- பாகவத புராணம

ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே

– குலசேகர ஆழ்வார்

வாய்மொழிந்து வாமனனாய் மாவலியால் மூவடிமண்
நீயளந்து கொண்ட நெடுமாலே தாவிய நின்
எஞ்சா இணையடிக்கே ஏழ்பிறப்பும் ஆளாகி
அஞ்சா (து) இருக்க அருள்

– பேயாழ்வர்ர்

விண் கடந்த ஜோதியாய் விளங்கு ஞானமூர்த்தியாய்
பண் கடந்த தேசமேவு பாவநாச நாதனே!
என் கடந்த யோகிளேடு இரந்துசென்று மணியாய்
மண் கடந்த வண்ண நின்னையார் மதிக்க வல்லரே

– திருமழிசை ஆழ்வார்

வேதநூற் பிராயம் நூறு மனிசர் தாம் புகுவரேனும்
பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு
பேதைபா லகன் அதாகும் பிணி பசி மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகர் உளானே

— திருமாலை

ஆலமாமரத்தினிலை மேல் ஒரு பாலகனாய்
ஞாலமேழு முண்டான் அரங்கத் தரவினணையான்
கோலமா மணியாரமும் முத்துத்தாமமும் முடி வில்லதோரெழில்
நீலமேனி ஐயோ நிறை கொண்டதென்னெஞ்சினையே

— திருப்பாணாழ்வார்

நாவினால் நவிற்றி இன்பமெய்தினேன்
மேவினேன் அவன் பொன்னடிமெய்ம்மையே
தேவுமற்றறியேன் குருகூர் நம்பி
பாவினின் னிசை பாடித்திரிவனே

— மதுரகவியாழ்வார்

காலையெழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள்
மாலின் வரவுசொல்லிமருள் பாடுநல் மெய்யம்மை கொலோ
சோலை மலைப்பெருமான் துவராபதியெம் பெருமான்
ஆலினிலைப் பெருமான் அவன் வார்த்தை உரைக்கின்றதே

[ நாச்சியார் திருமொழி

கங்கையிற் புனிதமாய் காவிரி நடுவு பட்டு
பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழிலரங்கந் தன்னுள்
எங்கள்மா லிறைவனீசன் கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன் ஏழையேனே ஏழையேனே

—திரு மாலை

பெரியவனை மாயவனைப் பேருலகம் எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் கனிவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே

—சிலப்பதிகாரம்

கேசவனையே செவிகள் கேட்க; திரு அரங்கத்து
ஈசனையே சென்னி இறைஞ்சிடுக நேசமுடன்
கண்ணனையே காண்க இரு கண் இணர்கொள் காயாம்பூ
வண்ணனையே வாழ்த்துக என்வாய்

திரு. அரங்கக்கலம்பகம்

அற்புதத் திருவைமார்பில் அணைத்தபே ரழகா போற்றி!
பொற்புறு திகிரிசங்கு பொருந்துகைப் புனிதா போற்றி
வற்புறு பிணிதீர்த் தென்னை மகிழ்வித்த வரதா போற்றி!
வெற்புய ரெவ்வுளூர் வாழ் வீரராகவனே போற்றி!

வீரராகவப் பெருமாள் போற்றி திருப்பஞ்சகம்

## திருப்பள்ளியெழுச்சி

கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான்
கனையிருளகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந் தொழுகின மாமலரெல்லாம்
வானவரரசர்கள் வந்து வந்தீண்டி
எதிர்திசை நிறைந்தனரிவ ரொடும் புகுந்த
இருங்களிற்றீட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில்அலை கடல்போன்றுள தெங்கும்
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே

தொண்டரடிப் பொடியாழ்வார்

மருவநின் திருநெற்றியில் சுட்டியசை தர
மணிவாயிடை முத்தம்
தருதலும் உன்றன் தாயைப்போலும் வடிவு
கண்டுகொண்டு உள்ளமுள் குளிர
விரலைச்செஞ்சிறு வாயிடைச் சேர்த்து
வெகுளியாய் நின்றுரைக்கும் மவ்வுரையும்
திருவிலேனொன்றும் பெற்றிலேன்
எல்லாம் தெய்வமங்கைய சோதைபெற்றாளே

குலசேகரப்பெருமாள் திருமொழி

## கண்ணன்

காட்டின் நடுவே கனிவாகக் கண்ணன்ஊதும் குழலோசை
வீட்டில் புகுந்து விளையாட விண்ணில் மிதந்து வருகிறதே
வழியில் விமலன் காத்திருப்பான் மலைமாமுகிலை நேர் எதிரே
விழிகள் குளிரக் காணுமல் வீணே காலம் கழிப்பேனோ?
பெருகும் மதுர இசைகேட்டுப் பேசாதிருந்நீர் தோழியரே!
மருவும் பெருமான் எழில்காண வருவீர் என்னைத் தொடர்வீரே
மாயோன் என்றால் பொருள் இல்லா வார்த்தை என்றேமதிக்கின்றீர்
ஓயா இதயத் துடிப்பாகி ஒளிர்வான் இறைவன் என்னுள்ளே!
கண்ணன் குரலை நீங்களெல்லாம் காதால் மட்டும் கேட்கின்றீர்
எண்ணம் முழுதும் இசைபாய எளியேன் உயிரும் சிலிர்க்கின்றேன்
வருவாய் ராதை நீ இல்லா மலர்ப்பூம பொழிலும் பொழிலாமோ?
விரைவாய் என் வேய்ங்குழலோசை மீண்டும்
என்னை அழைக்கின்றதே

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்

## இந்திரன் துதி

மேவாதவர் இல்லை; மேவினரும் இல்லை;
வெளியோடு இருளில்லை; மேலகீழும் இல்லை;
மூவாதமை இல்லை; மூத்தமையும் இல்லை;
முதலிடையோடு ஈறில்லை; முன்னொடு பின் இல்லை
தேவா! இங்கு இவ்வோ நின் தொன்றுநிலை என்றல்
சிலையே ந்தி வந்து' எம்மைச் சேவடிகள் நோவ
காவாது ஒழியின், பழிபெரிதோ? அன்றே
கருங்கடலில் கண்வளராய் கைம்மாறும் உண்டோ?

நாழி, நவைதீர உலகெலாம் ஆக
நளினத்து நீதந்த நான்முகனார் தாமே
ஊழி பல பலவும் நின்றளந்தால், என்றும்
உலவாப் பெருங்குணத்தெம் உத்தமனே! மேல்நான்
தாழி தரை ஆக தண்தயிர் நீராக
தடவரையே மத்தாக தாமரைக் கைநோவ
ஆழி கடைந்து அமுதம் எங்களுக்கே ஈந்தால்
அவுணர்கள் தாம் நின்னடிமை அல்லாமையுண்டோ?

கம்பராமாயணம் ஆரண்ய காண்டம்

# திருப்பாவை

ஆண்டாள் நாச்சியார் அருளியது

எல்லே! இளங்கிளியே! இன்னும் உறங்குதியோ?
''சில்'' என்று அழையேன்மின், நங்கைமீர்! போதர்கின்றேன்;
வல்லை,உன் கட்டுரைகள் பண்டேஉன் வாய் அறிதும்;
வல்லீர்கள் நீங்களே, நானேதான் ஆயிடுக
ஒல்லைநீ போதாய், உனக்கென்ன வேறுஉடையை;
''எல்லாரும் போந்தாரோ?'' ''போந்தார், போந்து எண்ணிக்
வல்ஆனை கொன்றானை; மாற்றாரை மாற்றுஅழிக்க [கொள்
வல்லானை மாயனைப் பாடேல், ஓர் எம்பாவாய்!

நாயகனாய் நின்ற நந்தகோ பன்உடைய
கோயில்காப் பானே! கொடித்தோன்றும் தோரண
வாயில்காப் பானே! மணிக்கதவம் தாள்திறவாய்;
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்;
தூயோமாய் வந்தோம் துயில்எழப் பாடுவான்;
வாயால்முன் னம்முன்னம் மாற்றாதே, அம்மா, நீ
நேய நிலைக்கதவம் நீக்கேல், ஓர் எம்பாவாய்!

அம்பரமே, தண்ணீரே, சோறே, அறம் செய்யும்,
எம்பெருமான்! நந்தகோ பாலா! எழுந்திராய்!
கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெரு மாட்டி! யசோதாய்! அறிவுறாய்;
அம்பரம் ஊடு அறுத்து ஓங்கிஉலகு அளந்த
உம்பர்கோ மானே! உறங்காது, எழுந்திராய்;
செம்பொற் கழல்அடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேல், ஓர் எம்பாவாய்!

உந்து மதகளிற்றன், ஓடாத தோள்வலியன்,
நந்தகோ பாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்;
வந்துஎங்கும் கோழி அழைத்தனகாண்; மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயில்இனங்கள் கூவினகாண்;
பந்தார் விரலி!உன் மைத்துனன் பேர்பாட,
செந்தா மரைக்கையால் சீரார் வளைஒலிப்ப
வந்து திறவாய், மகிழ்ந்தேல், ஓர் எம்பாவாய்!

உ



# சௌரம்

[சூரிய சமயம்]

## காப்பு

மண்ணுளுயிர் கட்கனைத்து மாறாதளித்து நலம்
நண்ணு நவக்கிரஹ மாண்பு சொலத் தண்ணுளவு
திங்களணி தங்கு முயர் செஞ்சடையர் உளமகிழசெய்
கங்கையருள் ஐங்கானார் காப்பு

## சிவபெருமான் துதி

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்தென
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே

## சூரியன்

ஆயுர்தேஹி, தனம் தேஹி, வித்யா தேஹி நமோ
ஸ்துதே அபீஷ்டம் அகிலாம் தேஹி தேஹிமே
கருணாகர ஓம் சாயா ஸம்க்ஞ ஸமோதே
ஸ்ரீ சூர்ய நாராயண ஸ்வாமிநே நம

## நவக்கிரகங்கள் - காயத்ரி

ஓம் அச்வத் வஜாய வித்மஹே; பாசஹஸ்தாய தீமஹி
தந்நோ சூர்யப்ரசோத யாத;
ஓம பத்மத் வஜாய வித்மஹே; ஹேமருபாய தீமஹி
தந்நோ ஸோமப்ர சோயாத,
ஓ:வீரத் வஜாய வித்மஹே; விக்னஹஸ்தாய தீமஹி
தந்நோ பௌம ப்ரசோதயாத்
ஓம் கஜத் வஜாய வித்மஹே; சுகஹஸ்தாய தீமஹி
தந்நோ புத ப்ரசோதயாத்
ஓம் விருஷபத் வஜாய வித்மஹே; கருணிஹஸ்தாய தீமஹி
தந்நோகுரு ப்ரசோதயாத்;
ஓம் அச்வத் வஜாய வித்மஹே; தநுர் ஹஸ்தாய தீமஹி
தந்நோ சுக்ர ப்ரசோதயாத்;
ஓம் காகத் வஜாய வித்மஹே; கட்க ஹஸ்தாய தீமஹி
தந்நோ மந்தப்ர சோதயாத்
ஓம் நகத் வஜாய வித்மஹே; பத்மஹஸ்தாயதீமஹி
தந்நோ ராகு ப்ரசோதயாத்
ஓம் அச்வத் வஜாய வித்மஹே; சூலஹஸ்தாய தீமஹி
தந்நோ கேது ப்ரசோதயாத்

## நவக்கிரக தியான சுலோகம்

ஆரோக்யம் ப்ரதாது நோதினகா;
சந்த்ரோ யசொ நிர்மலம்
பூதிம் பூமிசுத; ஸிதாம் சுதன்ய;
ப்ரக்ஞாம் குருர் கௌரவம்
கான்ய; கோமளவா விவாய மதுலம்
மந்தோ முதம் ஸர்வதா
ராஹிர் பாஹிபலம் விரோத சமனம்
கேது; குலஸ்யோன்ன திம்;

## பிரார்த்தனை

ஆதவன் சுகமும் சந்திரன் புகழும்
அங்காரகனுகிய பூமி சுதன் நிதியும்
மாதவ புதனறிவும், குரு கௌரவம்
வழங்கிட, சுக்கிரன் வாக்கதும் வழங்க
சாதனை மகிழவை சனியவர் நல்கிட
சக்தியம் வலிமையை ராகு வழங்கிட
ஒதிடும் புலமை கேதுவே நல்கிட
உலகினில் மானுடம் வாழ்க எந்நாளும்!

### ஸூர்ய பகவான்

ஜபாகுஸூம் ஸங்காஸம் காஸ்பேயம் மஹாத்யுதிம் !
தமோரிம் ஸர்வ பாபக்நம் ப்ரணதோஸ்மி திவாகரம்!

### சந்த்ரபகவான்

ததிசங்க துஷாராபம் க்ஷீரோதார்ணவ ஸம்பவம் !
நாமாமி சசிநம் ஸோமம் சம்போர் மகுட பூஷணம் !!

### அங்காரகன பகவான்

தரணீ கர்ப்ப ஸம்பூதம் வித்யுத்காந்தி மைப்ரபம் !
குமாரம் சக்தி ஹஸ்தம் ச மங்களம் ப்ரணமாம்யஹம்

### புத பகவான்

ப்ரியங்கு கலிகா ஸ்யாமம் ருபேணாப்ரதிமம் புதம் !
ஸௌம்யம் ஸௌம்ய குணோபேதம் தம் புதம் ப்ரணமாம்யஹம்

### குரு பகவான்

தேவாநாஞ்ச ரிஷிணாஞ்ச குரும் காஞ்நத ஸந்நிபம்
பக்திபூதம்தீரிலோகேசம் தம் நமாமி ப்ருஹஸ்பதிம்

### சுக்ர பகவான்

ஹிமகுந்த மிருணாலாபம் தைத்யாநாம் பரமம் குரும் !
ஸர்வசாஸ்த்ர ப்ரவக்தாரம் பார்கவம் ப்ரணமாம்யஹம் !!

### சனி பகவான்

நீலாஞ்ஜந ஸமாபாஸம் ரவிபுத்ரம் யமாக்ரஜம் !
ச்சாயா மார்த்தாண்ட ஸம்பூதம் தம்நமாமி சனைச்சரம் !

### ராகு பகவான்

அர்தகாயம் மஹாவீர்யம் சந்த்ராதித்ா விமர்தநம்!
ஸிம்ஹிகா கர்ப்ப ஸம்பூதம் தம் ராஹூம் ப்ரணமாம்யஹம் !!

### கேது பகவான்

பலாச புஷ்ப ஸங்காசம் தாரகா க்ரஹ ம்ஸ்தகம் !
ரௌத்ரம் ரௌத்ராத்மகம் கோரம் தம் கேதும் ப்ரணமாம்யஹம் !

### பொது ஸ்தோத்திரம்

ஆதித்யன் சோமன் அங்காரகன் புந்தி யண்டர் குரு
பேதித்த வெள்ளி சனி ராகு கேது பேருரைத்தால்
வாதித்த சூனியம் வல்பிணிச் சண்டை வருமிடியும்
ஏதித் தலத்தி லிராதே மிகச் செல்வமேவி டுமே

# ப்ருஹஸ்பதி (வியாழன்)

## முத்துஸ்வாமி தீக்ஷிதர் கிருதிகள்

இராகம்: அடாணா தாளம்: த்ரிபுட

பல்லவி

ப்ருஹஸ்பதே தாராபதே ப்ரஹ்ம ஜாதே நமோஸ்துதே

அநுபல்லவி

மஹாபல விபோகீஷ்பதே மஞ்சுதனுர் மீனாதிபதே
மஹேந்த்ராத் யுபாஸிதாக்ருதே மாதவாதி விநுததீமதே

சரணம்

ஸுராசார்ய வர்யவஜ்ரதர சுபலக்ஷண ஜகத்ரயரோ
ஜராதி வர்ஜிதாக்ரோகுத கசஜனகாச்ருத கல்பதரோ
புராரி குருகுஹஸம்மோதித புத்ரகாரக தீனபந்தோ
பராதிசத்வாரி வாக்ஸ்வருபப்ரகாசகதயா ஸிந்தோ
நிராமய நீதிகர்த்ரே நிரங்குசாய விச்வபர்த்ரே
நிரஞ்சனாய புவபோக்தரே நிரப்சாய ஸுக ப்ரதார்த்ரே

மொழி பெயர்ப்பு

ஓ ப்ருஹஸ்பதி! தாராவின் கணவரே! ஓ ப்ரஹ்மன்! நான் உம்மை வணங்குகிறேன். ஓ, வாக்குக்கு அதிபதியாகவும் தனுஸ், மீன ராசிகளையும் ஆள்பவரே! நீர் மஹேந்திரனால் தோத்தரிக்கப் பெற்றவர். ஓ! தேவர்களின் குருவே! நீர் வஜ்ராயுதத்தைத் தரித்திருக்கிறீர், ஓம மூவுலகங்களின் ஆசார்யரே- உம்முடைய பெயர் பவித்திரமானது. கோபத்தினின்றும், பழமையி! னின்றும் விடுபட்டவர் நீர், ஓ! கச்சனின் பிதாவே! உம்மைப் பணித்தவர்களுக்கு மோக்ஷ சாம்ராஜ்யத்தை அளிக்கும் கல்பதரு நீர். பரமேச்வரனின் ஆசானாகிய குருகுஹனை மகிழ்விப்பவர் நீர் ஒ ஆதரவற்றவர்களின் நண்பரே! ஸந்தான பாக்யம் அருள்பவர் நீர், பரா முதலிய நான்கு வகைகளிலும் பிரகாசிக்கிறீர் நீர் கருணைக கடல். நீர் குற்றமற்றவர், நீதியை வகுத்தவரும் நீர், உலகத்தின் தெய்வமாகும் நீர் கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட்டவர். நீர் குற்றமற்றவர். உலகத்தின் இன்பம் நீர். முழுமையானவர் நீர், மகிழ்ச்சியை அருள்கிறீர்.

உ
சிவமயம்



# கௌமாரம் [குமார சமயம்]

## திருச்செந்தூர் ஸ்தல புராணம்

### *விநாயகக் கடவுள்*

எழுத்துஞ் சொல்லும் பொருளு மிணக்குற
வழுத்துஞ் சீர்ச்செயந் திப்பதி மான்மியம்
விழுத்த குந்தமி ழாற்சொல வேதமே
பழுத்த குஞ்சரன் பாதங்கள் போற்றுவாம்

### *செயந்தி புரவத்தியாயம்*

விண்ணவர் பெருமான் வந்தான் வேனெடும் படையான் வந்தான்
பண்ணவர் மகுடந் தேய்க்கும் பதாம்புயக் கடவுள் வந்தா
னண்ணலங் குமரன் வந்தா னுறுமா முகத்தான் வந்தான்
றண்ணற வொழுகு நீபத் தாமவேள் வந்தான் வந்தான்

கழுமலத் துதித்த ஞானக் கான்முளே வந்தான் வந்தான்
மழையெனக் கருணே யெம்பால் வழங்கிய செல்வேன் வந்தான்
றழையுமுச் சங்கத்தேருந் தலைமைப்பா வலவன் வந்தான்
செழுமறைப் பெருமான் வந்தானென்றன் சின்னமெல்லாம்

ஆறுமா முகத்துப் புத்தேளணிகெழு தேரினீங்கிக்
கூறுநான் மறையுமொன்ருங் கோயிலிற் குறமான் யானைப்
பேறதாந் தெய்வ யானைப் பெண்ணெடு மடியர் வாழ்த்த
மாறிலாக் குமர மூர்த்தி மகிழ்ந்து விற்றிருந்தான் மாதோ

விற்றிருந் தருளிஞேடும் வேதற்கும் விளங்குஞ் சோதி
யாற்றலந் திகிரியாற்கு மமரர்க்கும் விடைமுன்னீந்து
தேற்றுநான் மறைவல் லோராந் திரிசுதந்திரத்தர் வாழ்த்திப்
போற்றவேற் கரத்துப் புத்தேள் புவனிகாத் தளிக்கு நாளில்

# கந்த புராணம்

அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய

மறைகளின் முடிவால் - வாக்கால் மனத்தினால் அளக்கொணாமல்
நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடு நிமலமூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோனறி யருளோடு சரவணத்தின்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந்தருளினானே

கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாட் பரிசிவை யுணர்ந்திலேன்யான்
மாலயன் றனக்கு மேனை வானவர் தமக்கும் யார்க்கு
மூலகாரணமாய நின்ற மூர்த்தியாம் மூர்த்தியன்றோ

ஒருகரந் தனிற் கண்டிகை வடம்பரித் தொருதன்
கரதலந் தனிற குண்டிகை தரித்திரு கரங்கள்
வரதமோ டபயந்தரப் பரம்பொருள் மகனோர்
திருமுகங்கொடு சதுர்முகன் போல் விதி செய்தான்

தீயவை புரிந்தா ரேனுங் குமரவேள் திருமுனுற்றால்
தூயவராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
யாயவும் வேண்டுங் கொல்லோ வடுசம ரிந்நாட் செய்த
மாயையின் மகனுமன்றோ வரம்பிலா வருள்பெற்றுய்ந்தான்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழிகருணை போற்றி
ஏவரும் துதிக்க நிறை ஈராறு தோள்கள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கை வேல் போற்றி போற்றி

ஆயிர கோடிகாமர் அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின வெனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந்தனனின்
தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடிவினைய தொல்லோன்
மாயிரு வடிவிற்கெல்லாம் உவமையாற் வகுக்க வல்லார்

முழுமதி யன்ன ஆறுமுகங்களு முந்நாள் சாரும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகிய கரமீராறும் அணிமணித் தண்டையார்க்கும்
செழுமலரடியுங் கண்டான் அவன்தவம் செப்பற்பாறிறோ

அருணகிரிநாதர்

# திருப்புகழ்

## காட்சி பெற

அந்தகன் வருந்தினம் பிறகிடச்
சந்தமும் வந்துகண்டரி வையர்க்
கன்புருகு சங்கதந் தவிரமுக் — குணமாக
அந்திபக லென்றிரண் டையுமொழித
திந்திரிய சஞ்சலங் களையறுத்
தம்புய தங்களின் பொருமையைக் - கவிபாடி
செந்திலையு ணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனைய றிந்தறிந் தறிவினிற்
சென்றுசெரு குந்தடந் தெளிதரத் — தணியாத
சிந்தையும் விழந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெசரிசனைப — படுவேனோ
கொந்தவிழ சரண சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெற அரக் — கருமானக்
குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின் கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங்குழைகளிற் - ப்ரபைவீசத்
தந்தன தனந்தளந் தளவெனக்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின கலின கலினெனத் திருவான
சங்கரி மணங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந்தொழுஞ் சரவணப் —பெருமாளே

செந்திலையுணர்ந்து, உணர்ந்து;-

அலைகள் வந்து ஒய்வடைகின்ற இடமாதலால் செந்திலுக்கு அலைவாய் என்று மற்றொரு பேருமுண்டு நினைப்பு மறப்புக்களாகிய அலைகள் வலியற்று அவனது திருவடியில் வந்து ஒடுங்க, கடற்கரையில் எம்பெருமான உறைகின்றனன். "பிறவிக் கடலில் வீழ்ந்தோரை எனது திருவடியாகிய ஒடத்தால் முத்திக்கரை சேர்ப்பதற்காகக் கடற்கரையில் யான் வசிக்கின்றனன்" என்ற குறிப்பைக் காட்டுவதற்காகவே முருகன் திருச்செந்தூரில் எழுந்தருளி யுள்ளான்.

அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பசுவின் – ஒளிர் வெளிறெயிறு துஞ்சற்குஞ்சித்
தலையுமுடை யவன அரவ தண்டச் சண்டச் சமனோலைச்
அதுவருகும் அளவில்உயிர் அங்கிட் டிங்குப்
பறைதிமிலை திமிர்மிகு தம்பட் டம்பற்
கரையஉற வினர்அலற உந்திச் சந்தித் தெருவூடே
எமதுபொருள் எனுமருளை இன்றிக் குன்றிப்
பிளவளவு தினைஅளவு பங்கிட்டு ண்கைக்
கினியமுது வசைதவிர இன்றைக் கன்றைக் கெனநாடா
திடுக்கடி தெனும் உணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனஅகலும் நெறிகருதி நெஞ்சத் தஞ்சிப் பகிராதோ;
குமுதபதி வகிர் அமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலஜடை பவுரிகொடுதெங்கப் பங்கிற் கொடியாடக்
குலதடினி அசைய இசை பொங்கப் பொங்கக்
கழலதிர் டெகுடெகுட டெங்கட் டெங்கத்
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத்தொங்க தொகுதீதோ
திமிதமென முழவொலி முழங்கச் செங்கைத்
தமருகம ததிர்ஜதியொ டன்பர்க் கின்பத்
திறம் உதவு பரதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா
திரளுமணி தரளம்உயர் தெங்கிற் றங்கிப்
புரளஎறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரசல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே

இன்றைக்கு அன்றைக்கு என நாடாது இடுக.–

அறிஞர் அறமொழியைக் கேட்பதனாலும் அறிவு நூல்களைப் டிப்பதாலும் அறஞ்செய்ய வேண்டுமென்ற எண்ணம் உண்டாயின் உடனே அறத்தைச் செய்யவேண்டும். இன்று நாளை புரிவோம் என்றிருத்தல் கூடாது. ஏனெனில் மறுகணம் இருப்போம் என்பது என்ன நிச்சயம். யாம் இளையோம் முதுமையில் அறம் புரிவோம் என்னில் இளமையில் அழிதலுங் கண்கூடு.முற்றிய கனியுதிர்வதோடு முதிராத பிஞ்சுகளும் உதிர்ந்து விழ்வதைக் காண்கிறோமல்லவா? ஆதலால் யாக்கை நிலையாமையை உணர்ந்து அறம்புரிய வேண்டு மென்ற எண்ணம் உண்டான போதே, விரைந்து தருமஞ் செய் என்றனர்.

# திருச்செந்தில் வெண்பா அந்தாதி

*வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்*

செந்துவர்வெற் பென்றிலகு சேந்தனடி யார்தமிழ்போற்
சிந்து முழங்குதிருச் செந்தூரில்-வந்துமுதல்
வேண்டு மவரை வினையொழிக்கு மெய்வழியிற்
றூண்டுகளிற் றானை துணை

சீர்மருவு செந்தினகர்ச் செவ்வேளைத் தேவர்புகழ்
பேர்மருவு வேற்கைப் பெருமாளைக் – கார்மருவு
கண்டமுளான் பெற்றநுதர் கண்மணியைக் கைகுவித்துக்
கொண்டவர்க்கே தீருமகுறை 1

ஏனே னெனஅடியே னெப்போ தழைத்தாலும்
வானே வழியா வரவேண்டும் – மீனேரும்
கண்ணார் இருவர்புணர் கந்தனே செந்திநகர்
அண்ணா வடிவேலா வா 5

வேலவனைச் செந்திநகர் வித்தகனை வேடமகள்
மாலவனைப் பச்சைமயில் வாகனனைச் -சாலக்
கருதி அருட்காட்சி கண்டவரைக் கண்டு
கருதி நலங் கொள்ளல் சுகம் 6

சுகமுனிவன் கேட்டுமகிழ் தூயபுகழ்ச் செந்தூர்க்
குகனருளே தஞ்சமெனக் கொண்டால் – இகபரமும்
சித்திக்கும், ஆனந்தச் செல்வஞ் செழிக்கும் உண்மைப்
பத்திக்கும் உண்டாம் பலன் 7

செய்யப் பவளத் திருவாய் திறந்தொருசொல்
ஐயமறச் சொற்றருள லாகாதோ-வையகமும்
வானகமும் போற்றுசெந்தின் மாநகரில் வாழ்குகனே
நானடிமை யன்றோ நவில் 22

கந்தா திருச்செந்தூர்க் காவலா கன்னிபெற்ற
மைந்தா எனவே வழுத்தாமல் – பந்தாய
கொங்கை மடவார் குணம்பாடிக் கொண்டாடிச்
சங்கைகற்போர்க் குண்டோ தவம் 24

நாவார வாழ்த்தும் நலம்பெற்றும் நானிலத்தில்
ஈவாரை நாடி யிளைக்கின்றேன் – நீவாரா(து)
இன்னந் துயர்ப்படுத்தல் ஏனோ இலங்குசெந்தூர்
மன்னவனே வேற்கைவய வா 35

வாரணமும் பைங்கிளியும் வன்னமயி லும்பிடித்த
காரணத்தால் வேடர்குலக் கன்னிதான்–சேர
நினைத்தாள் அவளையெந்த நீர்மைபற்றிக் கொண்டாய்
கனைத்தகடற் செந்திமுரு கா 57

ஓமென்ற மந்திரத்தின் உட்பயனை அத்தனொடு
நாமென் றுரைத்தசெந்தி னாயகனைத் – தேமென்ற
செந்தமிழாற் போற்றச் சிறிதுஞ் சலியார்பால் 65
அந்தகன்கைக் காசுசெல்லு மா

தேருலவுப் வீதித் திருச்செந்திற் சேவகனாம்
கூருலவா வேலான் குணங்களையிங்(கு) ஆருடனே
சொல்லலாம் சொல்லிற் றொலையாது சொன்னமட்டில் 68
நல்லதென்று கொள்ளா ரவர்

எனது மனந்தானோ எங்கெங்கும் நிற்கும்
உனது திருவருளோ ஓதாய் – அனவரதம்
பல்வார்த்தை யென்பாற் பகர்கின் றதுசெந்திற்
செல்வா சிவதே சிகா

தொழுவார் விழிகாணத் தோகை மயில்மேற்
குழுவாம் புலவரோடு கூடி - நழுவாத
வேல்பிடித்துத் தோன்றுதலை விட்டனை...யோ செந்திலிற்செங்
கோல்பிடித்த கைக்குகனே கூறு 84

கொல்லா விரதமொன்றே குற்றமற்ற தென்றுணர்ந்து
நில்லார் மனத்தகத்தும் நிற்பாயோ – வல்லாண்மைக்
கந்தனே செந்நகர்க் காவலனே நீதிநிறைந்த(து)
எந்தவிதம் என்னோ டியம்பு 91

வாய்மை அறிவடக்கம் வண்மை முதலாய
தூய்மை முழுதுந் தொகுத்துதவும் – செய்மருவு
செந்நகர்க் கோயிற் றெரிசித்துக் கொண்டபின்னும்
புந்தியிடத் துண்டாமோ பொய் 94

மனங்கொண்ட பேரான்வம வாழ்வனைத்தும் நல்கும்
கனங்கொண்ட செந்நகர்க் கந்தன் - தினங்கொண்ட
செந்தமிழின் ஆசை சிறிதுந் தணியானென்(று)
இந்தவிதம் நானறிந்ததே 96

சிலருக் கருள்புரிந்த செத்திற் குமரன்
பறிரைப் பரதவிக்கப் பார்த்தான் – உலகிற்
சிலயேனை ஆள்வானோ சீரழிப்பான் கொல்லோ
அறியேன் அறியேனம் மா 99

## நூற்பயன்

தண்பாவு செஞ்சொ ற்றமிழ்த்திருச்செந் தூர்முருகன்
வெண்பா ஒருநூறும் வேண்டுவார் கண்பாய
பூவுலகும் வானுலகும் போற்றும் புகழ்பொருத்து
மேவுவரன் னோனடிக்கீழ் மெய்

# செந்தில் முருகன் சந்நிதிமுறை

## முத்தம் வேண்டல் [முருகைய பங்கஜாஜி]

எந்தந் தவமே எழிற்குமரா
இளையே துமிலா இன்னமுதே
பந்தந் தவிர்க்கும் பரஞ்சுடரே
பரையின் சுதனே பாவலனே
உந்துந் திரைகள் சிதறுமுத்தால்
ஒளிரும் செந்தில் உத்தமனே
கந்தங் கமழும் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே

கந்தா கடம்பா கருத்தொளிரும்
கண்ணே மணியே கதிர்வேலா
செந்தா மரையாள் திருமருகா
திருச்சீ ரலைவாய் திகழ்ஞான
இந்தா விளக்கே நான்மூன்று
நளினக் கரங்கள் கொடுதழுவி
இந்தா எனவே என்குகனே
எனக்கோர் முத்தந் தந்தருளே

விண்ணா டவர்சே னாபதியே
விரிசெங் கதிரே விறல்வேலா
தண்ணா ரமுதே தகைசான்ற
தண்சீ ரலைவாய்ச் சண்முகனே
மண்ணா டவர்க்கோர் மாமருந்தே
மன்னே மணியே மயிலேறும்
கண்ணே உன்றன் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே

சிந்தா குலங்கள் சிந்திடப்பூஞ்
சிரிப்பா லென்னைச் சிறப்பித்தாய்
மந்தா கினியும் மகிழ்வுறவே
மணிவாய் ஆறில் மலர்முத்தம்
தந்தா யன்றோ சண்முகனே
தாயென் உள்ளத் தாபமறக்
கந்தா கனிவாய்த் தேனொழுகும்
கண்ணே முத்தந்தந்தருளே

# ஆறுமுகசுவாமி பஞ்சரத்தினம்

ஓராறு முகமாட ஈராறு புயமாட
ஓங்குவடி வேலு மாட
உச்சிதக் குண்டலமும் கச்சித முடியாட.
ஒளியான சுட்டியாட
பாராட தண்டையும் பாதச் சிலம்பாடப்
பணிந்திடும் பக்தராடப்
பன்னிரு கரமாடப் பணிந்த பூஷணமாட
பவளவெண் குடைகளாடத்

தோராத மயிலாடக் கோழித் துவசமாடத்
துலங்குநீர்க் கரவியாட
தொண்டர்கள் முதலான சண்டிகேஸ்வரராட
தொந்தநவ வீர ராட
தாராத தவமுனிவர் தானாட நீயாடி
தமியனேன் முன்பு வருவாய்
தகததிகென மயிலேறி திருநடன மாடிவரும்
தணிகாச லக்கடவுளே

தந்தை தாய் தெய்வமும் நீயேகதி யல்லாமல்
தற்காக்க ஒருவ ரில்லை
தயிரியம் சொல்லவும் தாபமது தீர்க்கவும்
தரணியில் எவருமில்லை
சந்ததமும் நூல்வேதம் உன்னையே புகழ்ந்து
சரணாகதி யென்ற வர்க்கு
சாலோக சாமீப சாரூப மேலான
சாயுச்சியந் தந்த குருவே

வந்தனம் செயுமுனது அன்பர்க் கிரங்கி நீ
வண்மையுடன் வரமளிப்பாய்
வள்ளி தெய்வானையுடன் வாழுமயிலேறியே
வாவேண்டு மெந்தனருகே
தந்திர மிகுந்ததிரு மாயனிட மருகனே
தற்பரா னந்த பரனே
தகததிகென மயிலேறி திருநடன மாடிவரும்
தணிகாச லக்கடவுளே

# குமரேச சதகம்

## திருப்புல்வயல் குருபாததாசர்

### விபூதி தரிக்கும் முறைமை

பத்தியொடு சிவசிவ வென்றுதிரு நீற்றைப்
பரிந்துகை யாலெ டுத்தப்
பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
பருத்தபுயம மீதி லொழுக
நித்தமு விரல்களா னெற்றியினமுந்தலுற
நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமா
நீங்காம னிமல னங்கே
சத்தியோடு நித்தம்வினை யாடுவன் முகத்திலே
தாண்டவ செய்யுந் திரு
சஞ்சலம் வராதுபர கதியுதவு மிவரையே
சத்தியஞ் சிவனெனலாம்
மத்தினிய மேருவென வைத்த முதிரைக்கடையும்
மான்மருக னான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே

தேவாலயம் சுற்றிடாதகால் என்னகால்
தெரிசியாக் கண் என்ன கண்?
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
சிந்தைதான் என்ன சிந்தை
மேலாக மஞ்சிவ புராணம் அவை கேளாமல்
விட்டசெவி என்ன செவிகள்?
விமலனை வணங்காத சென்னிஎன் சென்னி
விடைசெய்யாக் கை யென்னகை?
நாவார நினையேத்திடாதவாய் என்னவாய்
நல்தீர்த்த மூழ்காவுடல்
நானிலத் தென்ன உடல்? பாவியாகிய சௌன
நண்ணினால் பலனேது காண்?
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்டமுருகா?
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே

# தனிப்பாடற்றிரட்டு

வேத முடிவும் வேதாநத் முடிவும் விளக்கி விரைந்துனது
பாத மலரை யெனக் கருளப் பாக்கியந்தாள் செய்தேனே
நாத வடிவே நாதாந்த வடிவே ஞானகுருவடிவே
போத வடிவே திருசெந்தில் பொலிவுற்றமர்ந்த செவ்வேனே

சிவமே யருண கிரிநாதன் செப்பு மநுபூ திப்பயனைத்
தவமார் குமர சற்குருவாய்த் தரணிமீதிங் கருள்வாயே
அவமேபுரியுஞ் சூர்களைந்த வருளாரமுதே யருட்கடலே
நவமே கடற்செந் திலிமகிழ்ந்தெ ந்நாளும் மருநாயகமே

சக்கரை தேனும் பாலும் பழமுந் தனித்த நெய்யும்
முக்கியமான தீர்த்தமும் காவடி மிகவெடுத்து
வக்கனையா உன் பைந்தமிழோதும் உன்மைந்தனுக்கு
பக்தனை வந்து கார்ப்பாய் சிவமலை பண்டிதனே

எங்கெங் கிருந்தாலும் யெவ்விடத்தில் சென்றாலும்
துங்கமயிலும் வேலுந் தோன்றுமே திங்கள்
மலைக்குமரா வேணியான் மைந்தா தென்தேனி
மலைக்குமரா நீயோடி வா

அடிக்கினும் வேலுமயிலு மென்பேன் அறவே நாசினந்
தடிக்கினும் வேலுமயிலு மென்பேன் கடுங்காலனென்னைப்
பிடிக்கினும் வேலுமயிலு மென்பேன் பின்கட்டை யேல்மண்டை
வெடிக்கினும் வேலுமயிலு மென்பேன் செந்தில் வேலவனே

### சிவக்கவி சுப்பிரமணிய முதலியார்

ஐயா திருச்செந்தில் அப்பா உனைப் போல்
வெய்யேனை ஆட்கொள்ளும் மேலவரவார் எய்யாமற்
காப்பாய் எனைககடைக்கண் பாராய் கடவுளே
பாப்புனைந்து சாற்றுவனப் பா

போற்றி திருச்செந்தில் மேவுபோர் புட்கரிணி
போற்றியவன் தேவியர் பொற்பாதம் போற்றியே
அன்பர் விழிக்கென்றும் ஆராத கோலமென
என்புருக ஏத்துவன் ஈங்கு

# சண்முக கவசம்

[பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளியது]

---

(இந்தச் சண்முக கவசத்தை நாள்தோறும் காலைமாலை தவறாது ஓதி வழிபட்டால் எவ்வித நோயும் நம்மை அணுகாது. எண்ணிய எண்ணியாங்கு எய்தவும் கூடும்)

அண்டமாய் அவனியாகி அறியொணாப் பொருள(து) ஆகித்
தொண்டர்கள் குருவுமாகித் துகள் அறு தெய்வமாகி,
எண்திசை போற்ற நின்ற என் அருள் ஈசன் ஆன
திண்திறல் சரவணத்தான் தினமும் என்சிரசைக் காக்க

ஆதியாம் கயிலைச் செல்வன் அணிநெற்றி தன்னைக் காக்க
தாதுஅவிழ் கடப்பந் தாரான் தாள் இருநுதலைக் காக்க
சோதியாம் தணிகை ஈசன் துரிசுஇலா விழியைக் காக்க
நாதனாம் கார்த்திகேயன் நாசியை நயந்து காக்க

இருசெவி களையும் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல் முழுதும்நல் குமரன் காக்க
துரிசு அறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ரமணியன் காக்க

ஈசனாம் வாகுலேயன் எனது கந்தரத்தைக் காக்க
தேசுறு தோள் விலாவும் திருமகள் மருமகன் காக்க
ஆசுஇலா மார்பை ஈராறு ஆயுதன் காக்க, எந்தன்
ஏசுஇலா முழங்கை தன்னை எழில் குறிஞ்சிக்கோன் காக்க

உறுதியாய் முன்கை தன்னை உமையிள மதலை காக்க
தறுகண் ஏறிடவே என்கைத் தலத்தை மாமுருகன் காக்க
புறம்கையை அயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்கு(ம்) மால்முருகன் காக்க பின் முதுகைச்சேய் காக்க

ஊண் நிறை வயிற்றை மஞ்ஞை ஊர்தியோன் காக்க வம்புத்
தோணிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க, பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க

எஞ்சிடாது இடுப்பை வேலுக்கு இறைவனார் காக்க
அம்சகனம் ஓர் இரண்டும் அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருள் காங்கேயன் விளரடித்தொடையைக் காக்க
செஞ்சரண் நேச ஆசான் திமிருமுன் தொடையைக் காக்க

ஏரகத் தேவன் என்தாள் இரு முழங்காலும் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலைவாய்த் தே காக்க
நேருடைப் பரடு இரண்டும் நிகழ் பரங்கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க

ஐயறு மலையன் பாதத்து அமர் பத்து விரலும் காக்க
பையறு பழநி நாத பரன். அகம் காலைக் காக்க
மெய்யுடன் முழுதும், ஆதி விமல சண்முகவன் காக்க
தெய்வ நாயக விசாகன் தினமும் என் நெஞ்சைக் காக்க

ஒலியெழ உரத்த சத்தத் தொடுவரு பூத ப்ரேதம்
பலிகொள் இராக்கதப்பேய் பலகணத்து எவை ஆனாலும்
கிலிகொள எனைவேல் காக்க, கெடுபரர் செய்யும் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருந்திடா(து) அயில்வேல் காக்க

ஓங்கிய சீற்றமே கொண்டு உவணிவில் வேல் சூலங்கள்
தாங்கிய தண்டம் எஃகம் தடி பரசு ஈட்டி யாதி
பாங்குடை ஆயுதங்கள் பகைவர்என் மேலே ஓச்சின்
தீங்கு செய்யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க

ஔவியமுளர் ஊன்உண்போர் அசடர்பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவர் ஆனாலும் திடமுடன் எனைமல் கட்டத்
தவ்வியே வருவா ராயின், சராசரம் எலாம் புரக்கும்
கவ்வுடைச்சூர சண்டன்கை அயில் காக்க காக்க

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடி நாய் புலிமா யானை
கொடியகோணாய் குரங்கு கோல மார்ச்சாலம் சம்பு
நடையுடை எதனா லேனும் நான் இடர்பட்டி டாமல்
சடுதியில் வடிவேல் காக்க சானவி முளைவேல் காக்க

ஙகரமே போல் தழீஇ ஞானவேல் காக்க, வன்புள்
சிகிரிதேள் நண்டுக்காலி செய்யான் ஏறு ஆலப் பல்லி
நகமுடை ஒந்தி பூரான் அளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை இவையால் எற்கு ஓர் ஊறுஇலாது ஐவேல் காக்க

சலத்தில்உய் வன்மீன் ஏறு தண்டுடைத் திருக்கை, மற்றும்
நிலத்திலும் சலத்திலும் தான் நெடுந்துயர் தரற்கே உள்ள
குலத்தினால், நான் வருத்தம் கொண்டிடாது அவ்வவ்வேளை
பலத்துடன் இருந்து காக்க, பாவகி கூர்வேல் காக்க

ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிர கக்கோள் காக்க
சும விழி நோய்கள், தந்தசூலை, ஆக்கிராண ரோகம்
திமிர்கழல் வாதம், சோகை சிரமடி கர்ண ரோகம்
எமை அணுகாமலே, பன்னிருபுயன் சயவேல் காக்க

டமருகத்து அடிபோல் நைக்கும் தலையிடி கண்டமாலை
குமுறு விம்புருதி, குன்மம். குடல்வலி, ஈழை, காசம்
நிமிரொணா(து) இருத்தும் வெட்டை, நீர்ப்பிரமேகம் எல்லாம்
எமை அடையாமலே குன்று எறிந்தவன் கைவேல் காக்க

இணக்கம் இல்லாத பித்த எரிவு, மாசுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்கும் குஷ்டம் முலவெண்மூளை, தீ மந்தம்
சணத்திலே கொல்லும் சன்னி சாலம் என்று அறையும் இந்தப்
பிணிக்குலம் எனை ஆளாமல் பெரும் சத்திவடி வேல்காக்க

தவனமா ரோகம், வாதம், சயித்தியம், அரோசகம், மெய்
சுவரவே செய்யும் மூலச்சூடு, இளைப்பு, உடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவா தங்கள், சூலை
எவையும் என்னிடத்து எய்தாமல் எம்பிரான் திணிவேல் காக்க

நமைப்புறு கிரந்தி, வீக்கம் நணுகிடு பாண்டு, சோபம்
அமர்ந்திடு கருமை வெண்மை ஆகுபல் தொழுநோய் கக்கல்
இமைக்குமுன்உறு வலிப்போடு எழுபுடைப் பகந்த(ர) ஆதி
இமைப் பொழுதெனும் என்னை எய்தாமல் அருள்வேல் காக்க

பல்லது கடித்து மீசை படபடவென்றே துடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே உருட்டி நோக்கி
எல்லினும் கரிய மேனி எமபடர் வரினும் என்னை
ஒல்லையில் தார காரி ஓம் ஐம் ரீம் வேல் காக்க

மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதும் சாரிசெய் ஊர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தின் உள்ளும் வேறுஎந்த இடத்தும், என்னை
நண்ணிவந்து அருள் ஆர் சஷ்டிநாதன் வல்வேல் காக்க காக்க

யகரமேபோல் சூல் ஏந்தும் நறும்புயன் வேல்முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல்பின் காக்க
சகரமோடு ஆறும் ஆனான் தன்கைவேல் நடுவில் காக்க
சிகரமின் தேவமோலி திகழ்ஐவேல் கீழ்மேல் காக்க

ரஞ்சித மொழி தேவானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல் கிழக்கில் திறமுடன் காக்க, அங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன் வேல் காக்க, தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோன் இகலுடைக் கரவேல் காக்க

லகரமே போல் காளிங்கன் நல்லுடல் நெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழ் எனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க' மேற்கில்
இகல் அயில் காக்க வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க

வடதிசை தன்னில் ஈசன் மகன் அருள் திருவேல் காக்க
விடையுடை ஈசன் திக்கில் வேத போதகன் வேல் காக்க
நடக்கையில இருக்கும் ஞான்றும் நவில்கையில் நிமிர்கையில் கீழ்க்
கிடக்கையில், தூங்கும் ஞான்றும் கிரிதுளைத் துளவேல் காக்க

இழந்து போகாத வாழ்வை ஈயும் முத்தையனார் கைவேல்
வழங்கும் நல்ஊண் உண்போதும், மால்விளையாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்து நெஞ்சு அடக்கும் போதும்
செழும் குணத்தோடே காக்க திடமுடன் மயிலும் காக்க

இளமையில் வாலிபத்தில் ஏறிடு வயோதி கத்தில்
வளர்அறு முகச்சிவன்தான் வந்தெனைக் காக்க காக்க
ஒளிஎழு காலை, முன்எல் ஓம் சிவசாமி காக்க
தெளிநடு பிற்பகற்கால் சிவகுரு நாதன் காக்க

இறகுடைக் கோழித் தோகைக்கு இறைமுன் இராவில் காக்க
திறலுடைச் சூர்ப்பகைத்தே திகழ் பின் இராவில் காக்க
நறவுசேர் தாள் சிலம்பன் நடுநிசி தன்னில் காக்க
மறைதொழு குழகன் எம்கோன் மாறாது காக்க காக்க

இனம் எனத் தொண்டரோடும் இணக்கிடும் செட்டி காக்க
தனிமையில் கூட்டந் தன்னில் சரவண பவனார் காக்க
நனி அனுபூதி சொன்ன நாதர் கோன் காக்க, இத்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுள் தான் காக்க வந்தே!



# கந்தர் அலங்காரம்

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழும் செழும் சுடரே;
வைவைத்த வேல்படை வானவனே; மறவேன் உனை நான்;
ஐவர்க்கு இடம்பெறக் கால்இரண்டு ஒட்டி, அதில் இரண்டு
கைவைத்த வீடு குலையும்முன் னேவந்து காத்தருளே

பால்என் பதுமொழி, பஞ்சு என் பதுபதம் பாவையர்கண்
சேல்என் பதாகத் திரிகின்ற நீ செந்திலோன் திருக்கை
வேல்என் கிலை கொற்ற மாயூரம் என்கிலை, வெட்சித் தண்டைக்
கால்என் கிலை, மனமே! எங்ஙனேமுத்தி காண்பதுவே

நாள்என் செயும், வினை தான் என்செயும், எனைநாடிவந்த
கோள்என் செய்யும், கொடுங் கூற்றுஎன் செயும்குமரேசர் இரு
தாளும், சிலம்பும் சதங்கையும் தண்டையும்' சண்முகமும்,
தோளும், கடம்பும் எனக்கு முன் னேவந்து தோன்றிடினே

பத்தித் திருமுகம் ஆறுடன், பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதுகண் டேன், செயல் மாண்டு அடங்கப்
புத்திக் கமலத்து உருகிப் பெருகிப் புவனம் எற்றித்,
தத்திக், கரைபுர ளும்பர ஆனந்த சாகரத்தே

ஆலுக்கு அணிகலம் வெண்தலை மாலை, அகிலம் உண்ட
மாலுக்கு அணிகலம் தண்அம் துழாய், மயில்ஏறும்ஐயன்
காலுக்கு அணிகலம் வானோர்முடியும் கடம்பும் கையில்
வேலுக்கு அணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே.

விழிக்குத் துணை திரு மென்மலர்ப் பாதங்கள், மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும், பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங்கோடான் மயூரமுமே

மாலோன் மருமகனை, மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை, மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேல்ஆர் வயல்பொழில் செங்கோடனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரம்கண் படைத்தில னே அந்த நான் முகனே

காவிக் கமலக் கழலுடன் சேர்த்துஎனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகன னே. 'துணை யேது' மின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக் கொடிபோல்,
பாவித்தனிமனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே

# கந்தர் அநுபூதி

ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியானை சகோ தரனே

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று
உயர்வாய் மனமே! ஒழிவாய்!
மெய், வாய், விழி, நாசி யொடு செவியாம்
ஐவாய் வழிசெல்லும் அவா வினையே

யாம் ஓதிய கல்வியும் மெய்யறிவும்
தாமே பெற வேலவர் தந்தனரால்
பூமேல் மயல்போய் அறர், மெய்புணர்வீர்
நாமே நடவீர், நடவீர்! இனியே

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும குலமும் குடிபோகிய வா!
அடி அந்தம் இலா அயில் வேல் அரசே
மிடியென்று ஒரு பாவி வெளிப்படினே!

நாதா! குமரா! நம என்று அரனார்
ஓதாம் என ஓதியது எப்பொருளோ?
வேதா முதல்விண் ணவர் சூடுமலர்ப்
பாதா குறமின் பத சேகரனே!

எந்தாயும் எனக்கு அருள் தந்தையும்நீ!
சிந்தாகுலம் ஆனவை தீர்த்து எனையாள்
கந்தா! கதிர்வேலவனே! உமையாள்
மைந்தா!குமரா மறை நாயகனே

எந்நேரம் அதோ தெரியாது இறல்நாம்
அந்நேரம் ஒன்று ஆகாது எனமுன்
சொன்னேன் மனனே துவலோ துவலோ
தன்னேர் குகன்நற் சலசச் சரனே!

காடும் மலையும் கடலும் உருளச்
சாடும் தனிவேல் உடையாய் சரணம்
ஆடும் அயில்வேல் அரசே சரணம்
பாடும் வரதற் பரனே சரணம்

ஆளாய் அயில் வேல் அடியில் பணிவார்
கோளால் பிறரைக் குறிசெய்து அழியார்
மாளார் சமனால் மருகார் பகையால்
மீளார் வினையால் வெருவார் அவமே

## கவிமாமணி கா. ஷண்முகக் கந்தசாமி
தாரமங்கலம்

### நேரிசை வெண்பாக்கள்

எத்தனைத்துன் பங்கள் இனிவந்தா லும்எனது
சித்தம் தடுமாறச் செய்யாமல் - அத்தனையும்
தாங்கும் இதயம் தாவேண்டும் செந்தில் வாழ்
காங்கேய னேமுருகா கண்டு

ஐயன் திருச்செந்தில் ஆண்டவன் என்றுன்னை
மெய்யாகப் பத்திசெய்தும் மேன்மையருள் - செய்யாமல்
புள்ளிமயி லேறிப் புறப்பட்டு விட்டாயே
வள்ளியுடன் கூட மகிழ்ந்து

இடமறிந்து எம்மானை இன்தமிழால் பாடல்
குமரனன்று கொண்டவன்தான் பட்ட - கடன்தீர்க்க
உண்டியலில் சேர்ந்திருந்த ஒண்பொருளைத் தந்தவனே
பண்டாரம் அல்லவோ பார்

கந்தசா மிப்புலவன் காண வகைநின்று
செந்தமிழப் பாரசித்தச் செவ்வாயன் - செந்தில்
குமரன் அவன்தமிழ்மேல் கொண்ட விருப்பம்
அமிழ்தின்மேல் இல்லை அறி

தென்னூர்சென் றென்ன வடலூர்போய்ச் சேர்ந்தென்ன
பன்னூல் தெரிந்துப் படித்தென்ன - பொன்பொருளை
வாரிக் கொடுத்தென்ன வன்புலால் ஊனுண்போர்
சேர்வார் நகரமன்றே செப்பு

### கட்டளைக் கலித்துறை

வேறு முகம்பாரேன் வீணரைப் பர்டேன் விளக்கமில்லார்
கூறு மொழியால் மனத்திடு மாறேன் குணந்தரும் நன்
நீறு புனையாரைச் சேரேன் எனக்கிந் நிலவுலகில்
ஆறு முகங்கொண்ட ஐயாவின் பாதம் அருந்துணையே

மதியிலார் என்றும் அருளிலார் அன்பு மனம்விரும்பும்
பதியிலார் ஆன நிலமிலார் நாடும் பரந்தஇரு
நிதியிலார் பிடிலார் நிந்தையில் மிக்கார் நிறைந்தநூறு
விதியிலார் எல்லாம் உலகில் படைத்ததேன் வேலவனே

### நேரிசை வெண்பா

முழுமுதல் தெய்வம் முருகனுக்கு மூத்தோன்
எழுதரிய ஆற்றலுள்ள எமமான் - பழுதில்லா
அன்னவனைப் பாடி அரும்பயன் பெற்றுய்ந்தேன்
என்னுடல் பெற்றபயன் என்று

## முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்

### சிறு தேர்ப்பருவம்

வாராட்டு தவமுலைப் பாலொழுகி வழிவதென
மணிமுறுவ னிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டு முச்சிமோந் துந்திரு
மடித்தல த்தினிலிருத்திப்
பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்
பாலரொடும் விளையா டெனப்பணிந் துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயும்
தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவி லொருபாதி குளிர்வொரு புறநின்ற
தையனா யகியும்வைத்துச்
சீராட்டி விளையாடு சேனா பதிக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே

திருவளர் வளர்கத்தி புரிவளரின்குமர
சிறு தேருருட்டியருளே.

முத்துண்டு-முத்தமிட்டும், கண்மணிப்பாவை-கண்மணியினுள் தோன்றும் பாவை, தம்பிரான்-வைத்தியநாதர்.

## கவியரசர் கண்ணதாசன் பாடல்கள்

ஆறுமுகா சரவணா பரமன் ஈன்ற
அருட்கந்தா கடம்பா திருக்குமரா
வானவரைக் காக்க வந்த வடிவேலா
சூரவதை செய்யவந்த சுப்பிரமணியா
ஷண்முகா குகா சக்தி மைந்தா
சங்கரன் செல்வா முத்தமிழ் இறைவா
ஐங்கரன் பின்வந்த அன்பு முருகா
அறுவர் அருட்பாலுண்ட கார்த்திகேயா
கார்த்திகேயா கார்த்திகேயா கார்த்திகேயா

சொல்லச் சொல்ல இனிக்குதடா முருகா
உள்ளமெல்லாம் உன்பெயரை (சொல்லச்சொல்ல)
பிள்ளைப்பிராயத்திலே பெரியபெயர் பெற்றவனே
உள்ளமெல்லாம் உன்பெயரை (சொல்லச்சொல்ல)

# திருஅருட்பிரகாச வள்ளலார்
# தெய்வமணிமாலை

நீர்உண்டு பொழிகின்ற கார்உண்டு விளைகின்ற
நிலன் உண்டு பலனும் உண்டு
நிதிஉண்டு துதிஉண்டு மதிஉண்டு கதிகொண்ட
நெறி உண்டு நிலையும் உண்டு
ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு பணிஉண்டு
உடைஉண்டு கொடையும் உண்டு
உண்டுஉண்டு மகிழவே உணவுண்டு சாந்தம்உறும்
உளம் உண்டு வளமும் உண்டு
தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவும் உண்டு
தேன்உண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியானம்உண் டாகில் அரசே
தார்உண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம் ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி ஷண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே

## அருட்காட்சி - சிந்து

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயில் ஆச்சுத டி – அக்கச்சி
மயில்குயில் ஆச்சுத டி "

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றுடும்
வள்ளலைக் கண்டேன டி - அக்கச்சி
வள்ளலைக் கண்டேன டி

சாதி சமயச் சழக்கைவிட் டேன்அருட்
சோதியைக் கண்டேன டி அக்கச்சி
சோதியைக் கண்டேன டி

பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றுடும்
ஐயரைக் கண்டேன டி
ஐயரைக் கண்டேன டி

சைவ சிகாமணி கந்த சுவாமி பொற்ருள் எனக்குக்
கைவச மாகத் தருஞ்சே வகன்குந்தி காதலராம்
ஐவர் சகாயன் மருகன் திருமலை ஆறுமுகத்
தெய்வ சகாயமுண் டேவரு போகொடுந் தீவினையே
(திருமலை முருகன்பண்ணு

மாதாபி தாகுரு தெய்வங் களெல்லாம் இங்கெனக்கு
நீதான், எனை விலக்கல் நீதியென்ருல் ஆதாரம்
வேறுணர்கி லேன்பழனி வித்தகா வெவ்வினையை
நீறுசெயல் வேண்டும் இன்றே நேர்ந்து
(மாம்பழக்கவி)

சேவியேன் நின்னைவலஞ் செய்யேன்ஐ யோகொடிய
பாவியேன் எப்படி உய்வேன் மேவிஎனை
ஆளாயோ தென்பழனி ஐயாவின் ணப்பம்ஒன்றும்
கேளாயோ உள்ளங் கினர்நது

தோற்றி அருணகிரிதுன்பந் தனைத்துடைத்தாய்
தேற்றி அயனைச் சிறைவிடுத்தாய் ஏற்றிமுனம்
பொய்யா மொழிப்புலவன் போற்றவந்தாய் தென்பழனி
ஐயாஎன் பால்ஏன் அடம் (பழனி வெண்பா அந்தாதி)

வந்து மழை பொழியும் வானவெம் ஞர்தடிந்த
கந்தர் திருவிழாக்காலத்தில் தொந்தரையாம்
நீர்த்துளியை யூற்றிவிடல் மாற்றிவிடு நேரான்
கீர்த்திவரும நாட்டிலிதைக் கேள்

(குன்றக்குடி திருவிழாவின் போது மழையை நிற்கும்படி பாடுவார் முத்தப்ப செட்டியார பாடியது. மழையும் நின்றது.)

கன்று] அழைக்கும் முன்னே கருதிவரும் ஆபோல்
நின்று அழைக்கும் நாயேறகு நேர்தோன்றிஒன்றினுக்கும்
அஞ்சாதே வா என்று அழைப்பாய் தென்பேருரா
எஞ்சாத பேரருளால் இன்று

திருப்பேருர்ச்சந்நிதிமுறை

ஆறுபடை வீட்டி லமர்ந்தாய் அதுவன்றி
மாறுபடா தன்பர் மனத்திருப்பாய் நீறுபுனை ந்
தேற்றிப் பணிவேனை யிப்பிணிவா திப்பதுண்டோ
மாற்றிவிடச் சீக்கிறத்தில் வா

தனிப்பாடற்றிரட்டு

## படைத்தவன் கொடுமை

கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தானா?
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தான் இரட்சித்தானா?
அல்லைத்தான் சொல்லித்தா னாரைத்தான்
நோவத்தானையோ எங்கும்
டல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவியிற்றான் பண்ணினானே!

(இராமச்சந்திரக்கவிராயர்)

## காலமும் காலனும்

நெல் லறுக்க வோர்காலம் மலர்கொய்ய
வோர்காலம் நெடிய பாரக்
கல்லறுக்க வோர்க்காலம் மரமறுக்க
வோர்க்காலம் கணிதமுண்டு
வல்லரக்கனையனைய நமன் நினைத்த
போதெல்லாம் வாழ்நா ளென்றும்
புல்லறுக்க வருவனெனில் நெஞ்சமே
மற்றினியாம புகல்வ தென்னே

(வேதநாயகம் பிள்ளை)

## இக்கலிங்கம் போனால் சொக்கலிங்கம்

"அப்பிலே தோய்த்திட்டு அடுத்த டுத்து நாமதனைத்
தப்பினால் நம்மையது தப்பாதோ?" "இப்புவியில்
இக்கலிங்கம் போனாலென்? ஏகலிங்கமாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை" (இரட்டையர்)

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய் சிசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே! உனக்கென்ன வாய்? (சிவபோகசாரம்)

இந்திரற்கும் இந்திரன்நீ; இணையில்லா இருக்கையைநீ;
மந்திர மொழியினைநீ; மாதவர்க்கு முதல்வனும்நீ;
அருமைசால் அறத்தினைநீ; ஆருயிரும் அளித்தனைநீ;
பெருமைசால் குணத்தினைநீ; பிறர்க்கறியாத் திரத்தினைநீ;

(பெருந்தொகை)

# ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

ஒவ்வொரு யுகத்திலும் மனிதனுக்கு ஞானத்தை வழங்க இறைவனே அவதரிக்கிறான். சச்சிதானந்தமே குரு.

ஞானம் என்றால் என்ன? நான் யார்? எல்லாம் இறைவன் செயலே, நம்மால் ஆவது ஒன்றுமில்லை நான் கடவுளின் கையிலுள்ள கருவி என்று நினைப்பதும் ஞானம். அதனால்தான் 'நீ என்னை ஆட்டுவிப்பவன், நான் ஆடுபவன், நீ வசிப்பவன், நான் வீடு, நீ இயக்குபவன், நான் இயந்திரம், நீ என்னை எப்படி நடத்துகிறாயோ அப்படியே நான் நடக்கிறேன், எப்படிச் செய்யச் சொல்லுகிறாயோ, அப்படியே செய்கிறேன். எப்படிப்பேசச்சொல்லுகிறாயோ அப்படியே பேசுகிறேன். நான் இல்லை! நான் இல்லை! எல்லாம் நீதான், நீதான் என்று கூறுவேன்.

## ஆன்மீகம்

மனிதன் மனிதனாக வாழ்வதற்குத்தான். ஆன்மீகம்

இறைவனை உள்ளத்தில் இருத்தி வாழும்போதுதான் மனிதன் மாண்புடையவன் ஆகிறான்,

மனிதனை நெறிபடுத்தி வழிப்படுத்தி வாழ்விக்க வந்தவையே மதங்கள். தெய்வ பண்பாட்டுடன் மனிதன் வாழ்ந்தால், அவன் வாழ்வு சிறப்பதோடு அவன் வாழும் சமுதாயமும் சிறக்கும். மனிதன் காற்றை மட்டும் சுவாசித்து வாழ்வதில்லை, மாறாக உன்னதமான லட்சியங்களினாலும் நல்ல நம்பிக்கைகளினாலும் வாழ்கிறான்

இறைவனை நினைப்பதே வாழ்வின் ஊதியம் என்று நல்லவர்கள் நினைக்கிறார்கள், (ராமகிருஷ்ண விஜயம்)

யுகங்கள் நான்கு. கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்பன,

கிருதயுகத்தில் ஞானத்தினால் முக்தி
திரேதாயுகத்தில் தானத்தினால் முக்தி
துவாபரயுகத்தில் யாகத்தினால் முக்தி
கலியுகத்தில் பக்தியினால் முக்தி

பக்தி என்பது வடமொழி - அன்பு என்பது தென்மொழி
பக்தி வலையில் தான் கடவுள் அகப்படுவார்.

'பக்திவலையில் படுவோன் காண்க' திருவாசகம்

# வெண்பாக்கள்

குன்ற மெறிந்தாய் குரைகடலில் சூர் தடிந்தாய்
புன்தலையய பூதப் பொருபடையாய்—என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையா யென்னுள்ளத் துறை

குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன் கை வேல்

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றும்
துளைத்தவே லுண்டே துணை

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்குக்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்

உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தி வாழ்வே

அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந்தோன்றும்
முருகாவென் றோதுவார் முன்

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் ஆறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்கா யினி

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறும் சாற்றினல்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த எல்லாந் தரும்

திருமுருகாற்றுப்படையை ஓதிவரும் வழக்கத்தோடு இது முடிந்தவுடன் இதற்குப் பயன் உரைக்கும் பாடல் வேண்டுமென்று யாரோ அன்பருக்குத் தோன்றியது. அவர் பயனைக்கூறும் கவிகளோடு முருகனுடைய துதியாகவும் சில செய்யுட்களைப் பாடினர். அவர் பாடியவை பத்து வெண்பாக்கள் பக்திச்சுவை செறிந்து எளிய நடையில் அவை அமைந்திருப்பதனல் திருமுருகாற்றுப் படையைப் பாராயணம் செய்கவர்கள் யாவரும் முறையாகஅவற்றை இறுதியிலே சொல்லி வரலாயினர்.



# குமாரஸ்தவம்

[பாம்பன் சுவாமிகள்]

[நம என்பதை நமஹ என்று படிக்கவும்]

ஓம் ஷண்முக பதயே நமோ நம:
ஓம் ஷண்மத பதயே நமோ நம:
ஓம் ஷட்க்ரீவ பதயே நமோ நம:
ஓம் ஷட்க்ரீட பதயே நமோ நம:
ஓம் ஷட்கோண பதயே நமோ நம:
ஓம் ஷட்கோச பதயே நமோ நம:
ஓம் நவநிதி பதயே நமோ நம;
ஓம் சுபநிதி பதயே நமோ நம:
ஓம் நரபதி பதயே நமோ நம:
ஓம் ஸுரபதி பதயே நமோ நம:
ஓம் நடச்சிவ பதயே நமோ நம:
ஓம் ஷடக்ஷர பதயே நமோ நம:
ஓம் கவிராஜ பதயே நமோ நம
ஓம் தபராஜ பதயே நமோ நம;
ஓம் இஹபர பதயே நமோ நம:
ஓம் புகழ்முநி பதயே நமோ நம:
ஓம் ஜயஜய பதயே நமோ நம;
ஓம் நயநய பதயே நமோ நம:
ஓம் மஞ்சுரி பதயே நமோ நம:
ஓம் குஞ்சரி பதயே நமோ நம:
ஓம் வல்லீ பதயே நமோ நம:
ஓம் மல்ல பதயே நமோ நம:
ஓம் அஸ்த்ர பதயே நமோ நம:
ஓம் சஸ்த்ர பதயே நமோ நம:
ஓம் ஷஷ்டி பதயே நமோ நம:
ஓம் இஷ்டி பதயே நமோ நம:
ஓம் அபேத பதயே நமோ நம:
ஓம் ஸுபோத பதயே நமோ நம·
ஓம் வியூஹ பதயே நமோ நம
ஓம் மயூர பதயே நமோ நம:
ஓம் பூத பதயே நமோ நம:
ஓம் வேத பதயே நமோ நம:

| | | | |
|---|---|---|---|
| ஓம் புராண | பதயே | நமோ | நம: |
| ஓம் பக்த | பதயே | நமோ | நம: |
| ஓம் முக்த | பதயே | நமோ | நம: |
| ஓம் அகார | பதயே | நமோ | நம: |
| ஓம் உகார | பதயே | நமோ | நம: |
| ஓம் மகார | பதயே | நமோ | நம: |
| ஓம் விகாச | பதயே | நமோ | நம: |
| ஓம் ஆதி | பதயே | நமோ | நம: |
| ஓம் பூதி | பதயே | நமோ | நம: |
| ஓம் அமார | பதயே | நமோ | நம: |
| ஓம் குமரா | பதயே | நமோ | நம: |

| | |
|---|---|
| சுப்ரம்மணியம் | சுப்பிரமணியம் |
| ஷண்முகநாதா | சுப்பிரமணியம் |
| சிவசிவசிவசிவ | சுப்பிரமணியம் |
| ஹரஹரஹரஹர | சுப்பிரமணியம் |
| குருசரவணபவ | சுப்பிரமணியம் |
| குமாரகுருபரா | சுப்ரம்மணியம் |
| சிவசரவணபவ | சுப்ரம்மணியம் |
| சிவகுருபரஹர | சுப்ரம்மணியம் |
| குருபரஹரசிவ | சுப்பிரமணியம் |
| கூர்வடிவேலா | சுப்பிரமணியம் |
| ஒம்ஒம்ஒம்ஒம் | சுப்ரம்மணியம் |
| ஒங்காரரூபா | சுப்ரமமணியம் |
| ஓம்சரவணபவ | சுப்பிரமணியம் |
| ஒய்யாரவேலா | சுப்பிரமணியம் |
| கந்தா கடம்பா | கருணாகரனே |
| கதிர்வடிவேலா | சுப்பிரமணியம் |
| வருவாய் அருவாய் | மயில்மேல் அழகா |
| வடிவேல் அழகா | சுப்பிரமணியம் |

மூவிரு முகங்கள் போற்றி! முகம்பொழி கருணை போற்றி
யாவரும் துதிக்க நின்ற ஈராறு தோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி! அன்னார்
சேவலும் மயிலும் போற்றி! திருக்கைவேல் போற்றி போற்றி

# திருச்செந்திலாதிபன்
# ஐந்தாவது தொகுப்பு மதிப்புரைகள்

## தினமலர் 11—5—93

திருச்செந்தூர் திருமுருகன் கோயில் சங்ககாலத்திலேயே இருந்ததாக அகநானூறு (266) பாடல் கூறுகின்றது. புகழ்வாய்ந்த இவ்வூர் அலைவாய், செந்தில், செந்தூர், ஜெயந்தி என்று பல பெயர்களைப் பெற்றிருப்பினும், திருச்செந்தூர் எனும் பெயரே நிலைத்துள்ளது. செந்தில் முருகனை முதன்மையாகக் கொண்டு தொகுக்கப்பெற்றுள்ள இந்நூலில் காணாபத்யம், சாக்தம், கவுமாரம் முதலான அறுசமயம் பற்றிய பாடல்களும், 'வேத ஆகமங்களில் முருகன்' என்ற தலைப்பில் பல்வேறு அரிய செய்திகளும் காணப்படுகின்றன.

பக்தர்கள் அனைவரும் விரும்பி ஏற்கும் இந்த நூலைத் இலவச வெளியீடாகக் கொண்டு வந்துள்ள திரு. முத்தையா செட்டியார் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

## குண்டூசி 1993 ஜூலை

திருச்செந்திலாதிபன் ஐந்தாம் தொகுப்பாக வெளிவந்துள்து, இன்றைய பரபரப்புடன் கூடிய சமுதாயத்துக்கு அமைதியைத் தந்திடும் அருமருந்தாக விளங்குகிறது. திருச்செந்திலாதிபன் புத்தகம்,

பாராயணப் பாடல்கள் தலங்கள், மற்றும் இளைய தலைமுறையினர் உணர்ந்திடவேண்டிய அத்துணையும் தன்னுள்ளே கொணடுள்ளது.

மனதுக்கு அமைதி நல்கிடும் கந்தர் சஷ்டி கவசமுடன் வைணவ சாக்தம் பற்றிய துதிகளும காணப்படுகின்றன.

திருநீறு, உருத்திராட்சத்தின் மகிமைதனை அழகுபட விளக்குகின்ற அற்புதமான நூல்.

திருச்செந்தூர் பற்றிய வரலாறும் சைவ நெறி தழைத்தோங்கிட நெறியான தெய்வத் துதிகளுடன் அழகு ஓவியமாக, ஆன்மீக பெட்டகமாக காட்சி தருகின்றது. இச் சிறந்த நூலை ஆன்மீகத் தந்தை உயர் திரு. வ. முத்தையா செட்டியார் அவர்கட்கு ஆன்மீக உலகம் மிகவும் கடமைப்பட்டுள்ளது இதனைப்படிப்பவர் முருகன் கடாட்சம் நிச்சயம் அடையப் பெறுவர். இது உறுதி.

—சுப்ரபாதம், வி. ஆர். வரதராஜன்

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் ஸ்ரீமுக ஸ்ரீ ஆவணி மீ

பாராயணப் பாடல்கள், திருத்தலங்கள், திருநீறு, ருத்திராட்சம் வழிநடைப் பாடல்கள், பக்தி பற்றிய செய்திகளின் தொகுப்பு பக்கம் 170 இலவச வெளியீடு

20 - 90 - 41 வார இதழ்
டி. எஸ். பாலு, திருவான்மியூர்

முத்தைய்யா எனும் முத்தமிழ் வல்லார்
கொத்தக் கனியாய் குளிர் தமிழில்
வித்தகப் பாட்டாய் விந்தைப் பொருளாய்
தித்திக்கும் நூலாய் திருச்செந்திலாதி பனை
எத்திக்கும் வாழ்வோரும் ஏத்திப் போற்றிட
நித்திலப் படைப்பாய் ஈத்தார் நன்கு!
சித்தமெல்லாம் செல்வமே என்றிருப்போர்
மெத்தவும் இதனைப் படித்தால் இங்கே
சித்திரை நிலவாய் மகிழலர்ம்: மணக்கலாம்?

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை
11—1—1993ம் தேதியிட்ட கடிதம்

தமிழுக்கும், சமயத்திற்கும் விளக்கம் அளிக்கும் வகையில் தாங்கள் தொடர்ந்து வெளியிட்டுவரும இந்த இலவச நூல் தனிச்-சிறப்புக் கொள்கிறது,

மதுரை காமராஜர் யுனிவர்ஸிட்டி
டாக்டர் திருமுருகரத்தினம், தமிழியல் புலத் தலைவர்

முருகன் பற்றியும் சைவம் பற்றியும் பல்வேறு கருத்துக்களைத் தாங்கி அந்நூல் மிகவும்பயனுடையதாக விளங்குகிறது.

பல இடங்களிலும் இருந்து அருள்பெற்ற அடியார்களின் சிறந்த ஒப்பற்ற பாடல்களை தொகுத்து இலவசமாக வேண்டுவோர்க்கு எல்லாம் கொடுத்தும் அனுப்பியும் செய்யும் திருத்தொண்டு வளர்வதாக

*சுவாமி பிரகாசமயானந்த ரிஷிகேசம்*

திருச்செந்திலாதிபன் ஒரு 'அரிய தொகுப்பாக அமைத்துள்ளீர்கள் வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் என்பது போல் இன் நூலைப் படிப்பவர்கள் தாங்கள் வழிபடு கடவுளைத் தோத்திரம் செய்ய ஏதுவாக பலதரப்பட்ட பாசுரங்களைத்தொகுத்திருப்பது பாராட்டுதற்குரியது.

C. குருநாதன்
*திருஞானசம்பந்தர் நற்பணி மன்றம்*
*கும்பகோணம்*

அருமையானபாடல்களைமந்திர ஆற்றல் பொருந்தியபாடற்பகுதிகளை தொகுத்து கொடுத்திருக்கிறீர்கள்.

*மா. இராமானுஜம்*
*பேராசிரியர், பாரதிதாசன் பல்கலைக் கழகம்*

பிறவியெனும் பிணியறுத்து உச்சிநின்று உலகோரை தம் வழியில் செல்ல வேண்டி, தாம் பெற்ற அனுபவத்தை மூத்தோர் சொன்ன தனி சிறந்த பாடல்களை நூலில் வைத்தீர்.

G. வேங்கடராமன்
*ராகவேந்திரா இல்லம், விருத்தாசலம்*

இறை வளத்தினை அள்ளிவழங்கும் ஒரு காமதேனு. நன் முத்துக்கள் கோர்த்த தமிழ்மாலை தெய்வ பக்தியை வளர்க்க மிகக அரியதாகிய இக்கலியுகத்தில்கைமணக்க வாய்மணக்க உளம்மணக்க உயிர் மணக்க, ஆன்மா பேரின்ப நிலையினைப் பெற்று இனி ஒரு பிறவியினை எய்தாவணம் காக்கும்தேவ அமிர்தமாக அமைந்தது (அமைத்தது) திருவருளே ஞானிகளின் கருத்தும் திருமுறைகளும் முடித்தவரை பொறுக்கு பிழையின்றி அச்சேற்றி வழங்கியுள்ளீர்கள்

*செங்கோட்டை கவிராஜர் ஸ்ரீ அருணசலம் பிள்ளை*

செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வுற கந்தனை அறிந்து அறிந்து அறிவினில் இன்புறும்வகையில் தங்கள் தொகுப்பு உள்ளது, ஒவ்வொரு பக்கமும் தித்திக்கிறது. முருகப்பெருமான சிற்றடியைப் பணிந்து பெற கற்கும் வகையில் அமைந்துள்ளது.

வலையபேட்டை ரா. கிருஷ்ணன்

நேரிசை வெண்பா

திருச்செந்திலாதிபன் சீரெல்லாம் போற்றும்
அருச்சனைப் பாக்கன் அத்தனை–அருத்தியொடு
இவ்வுலகம் போற்ற இலவசமாய்த் தந்தவரை
எவ்வுலகும் போற்றும் இனிது

முத்தையபு ஒன்றும் முகமதி யாதவர்க்கும்
சித்தமொடு நூலனுப்பும் செல்வமகன் இத்தரையில்
அன்னவன் நற்பணிபோல் யார்செய்ய வல்லார்கள்
பன்னலமாய் வாழ்க பணிந்து

கவிமாமணி கா. சண்முகசுந்தரம்
தெற்கு ரத வீதி, தாரமங்கலம்

வாழ்த்து
[ஆசிரியப்பா வகையில்]

இறைபணி ஏற்போர் யாவ ராயினும்
இறைபணித் தியற்றுவோர் தொழுதகையுடையரே
இறைபணி விருப்பந் தருவ தன்றே
இறைபணிந் தாரை இறைவன் மனகொளும்
இறைபணிக் கொள்வார் உயர்ந்தோ ராகுப,
இறைபணிக் கொள்முத் தையா வாழ்கவே!

புலவர் இரகி. பூபதி
வெ. வலசை சேலம் மாவட்டம்

## துதிகள்

சிவம் சிவகரம் சாந்தம் சிவாத்மானம் சிவோத்தமம்!
சிவமார்க ப்ரணே தாரம் ப்ரணதோஸ்மி ஸதாசிவம்!!

வாகர்தாவிவ ஸம்ருக்தௌ வாகர்த ப்ரதிபத்தயே
ஜகத: பிதரௌ வந்தே பார்வதீ பரமேஸ்ரௌ!!

ஈசாந: ஸர்வவித்யாநாம் ஈச்வர: ஸர்வ பூதானாம்!!
ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிர் ப்ரஹ்மா
சிவோமே அஸ்து ஸதாசிவோம்!

---

மடம் உண்டோ? சிவாலயங்கள் மிகுதி உண்டோ?
வாசிட்டம் படிப்பதுண்டோ? மடத்துள் ஞானத்
திடம் உண்டோ? நால்வர் தமிழ் படிப்பார் உண்டோ?
திவ்வியமாம் உதார முதல் குணங்கள் உண்டோ?
விடம் உண்டோன் அடியார்குழாம் மிகுதி உண்டோ?
மெய்யறம், சத்திரம், விரைப்பூங் காவும் உண்டோ?
வடகயிலைக்கு இறைவன் எனும் முத்துராம
வள்ளல் திருக்கழனி நகர் வாராமுன்னம்

கோவிலூர் மடாலய முதற்குருவாயிருந்த தவத்திரு. ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகளைச் சிறப்பித்து சேந்தனி பழனியப்பா பாடிய பாடல் மடாலயமுதற்குரு ஞானதேசிகரவர்கள் கழனி (கோவிலூர்) நகரில் அடி எடுத்து வைப்பதற்கு முன், மேற் குறித்த சிறப்புக்கள் எவையும் இல்லை.

எ, கே. செட்டியார்
நூல்: திருக்களர் ஆண்டவர் வரலாறு

# வாழ்த்து

தேவார முதலியஐந் துறுப்பும் வாழ,
சிறந்தமறை ஆகமங்கள் செழித்து வாழ,
தாவாத சித்தாந்த சைவம் வாழ,
சந்தவஉரச் செந்தமிழ்நூல் தழைத்து வாழ,
நாவாரும் புகழ்க்கச்சி நகரிற் காம
நயனியொரு முறையிறைசீர் நன்கு பாடி
பூவாரு மலர்விழியீர் ஆடீர் ஊசல்
புத்தமுத நிர்மொழியீர்; ஆடீர் ஊசல்
(காசிக்கலம்பகம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுமாம்
(பெரிய புராணம்

வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ்ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே
(திருமந்திரம்

ஆறிரு தடந்தோள் வாழ்க ஆறுமுகம்வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானை தன் அணங்குவாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீர் அடியாரெல்லாம்

வான்முகில் வழாது பெய்க மலிவளம் காக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யரங்கள் ஓங்க நற்றவம் வேள்விமல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்

உ
சிவமயம்



# கற்பக விநாயகர்

மங்கலம் அனைத்தையும் தந்தருளும் அப்பனே!
மகிமைமிகும் என்ஐயனே!

வாசித்து, நேசித்து, பூசித்து வருவாரை
வாழ்வித்து வரும் ஈசனே!

சங்கர, சதாசிவ, சடாதரன் மைந்தனே!
சக்திசிவ காமிமகனே!

தன்னடி பணிந்தாரைத் தலைமேற் சுமந்தருளும்!
தயவுடைய மகராசனே!

இங்குநான் உன்னையே துணையாக நம்பினேன்!
எனதுகுறை யாவும் அறிவாய்!

இப்போதும், எப்போதும், தப்பேதும் வராமல்
என்னைநீ காத்து வருவாய்!

பங்கய வயல்சூழும் பிள்ளையார் பட்டிவளர்
பரமகரு ணாமூர்த்தியே!

பதினாறு பேறுகளும் அடியேனும் பெறுமாறு
பாலித் தருள்வாழ்த்தியே!



ஏதுபிழை செய்தாலும் ஏழை எனக்கிறங்கி
தீது புரியாத தெய்வமே போரூர்
தனி முதலே நாயேன் பிழைக்க
முருகா நீ பேசு.



# இலக்குமி துதி

செந்தா மரைமலரில் திகழ்கின்றவள்
ஸ்ரீரங்க நாதனோடு மகிழ்கின்றவள்

சந்தான சௌபாக்கியம் தருகின்றவள்
தட்டாமல் ஓடோடி வருகின்றவள்

வற்றாது பால்வழங்கும் பசுவானவள்
மடிமீது உறவாடும் சிசுவானவள்

கற்றார்க்கும் கல்லார்க்கும் உயிரானவள்
கண்போகும் இடமெங்கும் பயிரானவள்

நன்செய்யும் புன்செய்யும் தானானவள்
நவதான்யப் புலமெங்கும் ஆளானவள்

பொன் செய்யும் வேளாளர் கரமானவள்
புவியோரை வாழ்விக்கும் வரமானவள்.

—★—



# ஸ்ரீ வெங்கடேசன்

ஆதிசே ஷா அனந்தசயனா
ஸ்ரீ நிவாசா ஸ்ரீ வெங்கடேசா

வைகுண்டநாதா வைதேகிப்பிரியா
ஏழுமலை வாசா எங்களின் நேசா (ஆதி)

வேணுவிலோலன விஜயகோபாலா
நீலமேக வண்ணா கார்மேக கண்ணா (ஆதி)

காளிங்க நர்த்தனா கமனீய கிருஷ்ணா
கோமள வாயனா குருவாயூரப்பனா (ஆதி)

ஸ்ரீ ராம சந்திர மூர்த்தியைப் பாடு
தீவினை யகல அவன் திருவடி தேடு (ஆதி)

பாவங்கள் போக்க பஜனைகள் செய்வோம்
பார்த்த சாரதியின் பாதம் பணிவோம் (ஆதி

திருப்பதி மலையில் திருமுகம் காட்டும்
திருவேங்கடத்தான் திருவருள் பெறுவோம் (ஆதி)

ஸ்ரீ ரெங்கநாதன் பள்ளி கொண்டிருக்கும்
ஸ்ரீ ரெங்கம் சென்று திருவடி பணிவோம். (ஆதி)

# சிவபெருமான்

கங்கையுன் சடையிலே மங்கையுன் உடலிலே
காமனை ஏனெ ரித்தாய்?

காஞ்சிகா மாட்சிநல் லறமெலாம் செய்யநீ
கையில் ஏன் ஓடெ டுத்தாய்?

தங்கம்உன் மண்ணிலே தர்மம்உன் கண்ணிலே
சாம்பலில் ஏன்கு ளித்தாய்?

தக்கதோர் ஆடையைத் தந்தவர் இல்லையோ
தன்னிலேன் தோலு டுத்தாய்?

தங்குமோர் தில்லையில் உன்குலம் தேற்றதோ
சபையிலேன் அட வந்தாய்?

சாதமும் கறியுமே ஊட்டுவா ரின்றிநீ
தாய்பெறும் பிள்ளை உண்டாய்

மங்கலம் பொங்குமோர் மதுரையில் சொக்கனுய்
வாழ்கிற மாய சிவனே!

வளர்பொதிகைத் தென்றலில் குலமகளைச் சேர்கின்ற
மலைநாதன் என்ற தவனே!

கண்ணதாசன்



நந்த வனத்தில் ஓர் ஆண்டி
அவன்நாலாறு மாதமாய் குயவனை வேண்டி

கொண்டு வந்தான் அதை தோண்டி
கூத்தாடி கூத்தாடி போட்டுடைத்தாண்டி

131

## காவிரி போல்வளர்வோம்

அள்ளிக் கொடுப்பதில் வல்லமை பெற்றவன்
அப்பன் பழனியப்பன் - தினம்
அச்சம் தவிர்ப்பவன் ஆறுதல் சொல்பவன்
அப்பன் பழனியப்பன்
கள்ளம் கபடம் இல்லாதவர் தம்மிடம்
காவலில் நின்றி ருப்பான் - அங்கு
கால்நடை யாய்வரும் மானிட ஜாதியைக்
கண்டுகளித்தி ருப்பான். 1

துள்ளிவரும் வடிவேலுக்கு மேலொரு
ஜோதிப் பிழம்புமுண்டோ? - அந்த
சுப்பையன் போலொரு அற்புத தெய்வத்தை
சொல்ல மொழியுமுண்டோ!
வெள்ளிமுகம் பனிரெண்டையும் கண்டபின்
வேறொரு சொர்க்கமுண்டோ? - ஆண்டி
வேஷத்திலாயினும் வீரத்திலாயினும்
வேலனை வெல்வதுண்டோ! 2

சித்தர் வணங்கிய சேவற் கொடியோனைச்
சேர்ந்து வணங்கிடுவோம் - அந்த
சிக்கலிலாயினும் செந்திலிலாயினும்
சென்று கனிந்து நிற்போம்!
பக்தருக்கென்று திறந்திருக்கும் தென்
பழனியைக் கண்டுகொள்வோம் - அங்கு
பாலபிஷேகமும் தேனபிஷேகமும்
செய்து பணிந்திடுவோம்! 3

செட்டி முருகன் எனும் பெயர் பெற்றவன்
தெண்டாயுதமல்லவோ - அந்த
சித்திர வள்ளியும் சாடையில் மற்றொரு
செட்டி மகளல்லவோ!
கொட்டிக் கொடுப்பவன் கோவிலைப் பார்த்திட
கோஷ மிட்டோடிடுவோம் - முள்ளும்
குத்தட்டுமே கல்லும் தட்டட்டுமே வலி
கொஞ்சமும் கண்டுகொள்ளோம்! 4

ஆறும அறுபதும் ஆன இருபதும்
ஆடிநடந்து செல்வோம் - சில
ஆனந்தப் பாடல்கள் வேலனைப் பாடட்டும்
அன்புடன் ஊர்ந்து செல்வோம்!
ஊறுகள் நேரட்டும உமையவள் மைந்தனை
உச்சத்தில் வைத்திருப்போம - கையில்
உள்ளத்தை அன்னவன் கோவிலுக்கே தந்து
மிச்சத்தில் வாழ்ந்திருப் போம்! 5

வேலன் குமரன் திருச்செந்தில்
வேட்டுவன் கந்தனுக்கு - இரு
கால்கள் நடக்கின்ற நடையினில் தானுயர்
கனிவு நிறைந்திருக்கு!
காலம் வழிவிடும கச்சிதமாய் சென்று
கால்களிலே விழுவோம் அவன்
கால்களிலே விழக்கால்கள் நடக்கட்டும்
காவிரிபோல் வளர்வோம்! 6

-அமரர் கவியரசர் கண்ணதசாதன்



வந்தவினையும் வருகின்ற வல்வினையும் கந்தன்
என்று சொல்லக் கலங்கிடுமே தென்பழனி
சேவகா என்று திருநீறு அணிவர்க்கு
மேல் வாராதனே தீவினை

# ஸ்ரீ பழநியாண்டவர் திருப்பதிகம்

அருட்கவி கு. செ. இராமசாமி M. A.;
சிவகெங்கை

## விநாயகர் காப்பு

மோதகம் நிவேதனம் மூஷிகம்உன் வாகனம்
முறங்கள்போல் செவித்தலம் வரங்கொடுக்கும் ஐங்கரம்;
போதகம், கஜானனம் புராணஞான வாரணம்;
போற்றிபோற்றி உன்பதம் காக்கவேண்டும் என்குலம்.

வேல்பிடித்த கையிலே செங் கோல்பிடித்து நின்றவா!
வேண்டிவந்த யாவையும் விறைந்தளிக்கும் மன்னவா
கால்பிடித்தேன், என்மனக் கலக்கம்நான் உறைக்கவா!
கண்திறக்கவேண்டும் வேண்டும் தென்பழநி ஆண்டவா! 1

எனதுபக்கம் நீயிருக்க எங்கிருந்து பகைவரும்?
யானிருந்த மனைநடுங்க எவ்விதம் துயர்வரும்?
மனநொந்து நொந்து வந்த மைந்தனை நீ தாங்கவா
வாழிவாழி தென்பழநிக் கோவில்கொண்ட ஆண்டவா! 2

ஆதிநாளில் சூரனை அழித்ததெய்வம் நீயெனில்
அடுத்துவந்த பகையெல்லாம் முடித்ததுண்மைதான் எனில்
மோதிநிற்கும் என்பகை முடிக்கவேல் எடுத்துவா
முருகனே தென் பழநிகொண்ட அழகனேஎன் ஆண்டவா! 3

பன்னிரெண்டு கைத்தலத்தில் பளபளக்கும் ஆயுதம்!
பாய்ந்துசெல்லத் துடிதுடிக்கும் பச்சைமயில் வாகனம்!
இன்னல்செய்யும் பகைமுடிக்க இன்னும்என்ன தாமதம்?
என்னையாளும் மன்னனுன தென்பழநி ஆண்டவா! 4

ஈசனே, உன் மனைவி பேரும் தேவசேனை என்கிறார்!
இன்னொருத்தி விழியிரண்டும் ஈட்டியென்று சொல்கிறார்!
வாசம் செய்யும் இடமெலாமும் பாசறைகள் அல்லவா?
மைந்தனேன் பகைமுடிப்பாய் தென்பழநி ஆண்டவா! 5

எம்பிரானே ஒன்பது பேர் தம்பிமாரை நம்பினேன்!
எனது காவல் இவர்கள் என்று கவிதைபாடிச் செல்கிறேன்!
நம்பினாரை காக்கவேறு நாதன் ஏது சண்முகா?
நலிவொணாப் பகைமுடிப்பாய் பழநிமலை ஆண்டவா!

ஆறுபடை வீடிருக்க வேறுபடை ஏனடா?
அழிக்வொணாத கோட்டைநின் சடக்கரங்கள் தாமடா!
மாறிலாத கவசமாய் வரும்சுழன்று வேலடா!
வல்வினை பகைமுடிப்பாய் தென்பழனி ஆண்டவா!

ஆரவார மாய்எழும் அகப்பகை; புறப்பகை:
அறியொணாத மந்த்ரயந்த்ர தந்ரமாய் வரும்பகை;
வேர்விடும் குலப்பகை வினைப்பகை கிரகப்பகை
வேறுபல் பகைமுடிப்பாய் வேள்பழநி ஆண்டவா!

எந்தவேளைப் யானபோதும் கந்தவேளைப் பாடுவேன்!
இந்தவேளை உன்னையன்றி எந்தஆளை நாடுவேன்?
வந்தவேளை நல்லவேளை வாகைகொண்ட வேலவா
வல்பகை ஒளித்தருள்வாய் தென்பழநி ஆண்டவா!

அப்பனே அடைக்கலம்; என் ஐயனே. அடைக்கலம்;
அமரர்கோன் பகைமுடித்த அண்ணலே அடைக்கலம்;
எய்ப்பிலே சரண் புகுந்தேன்; ஈசனே அடைக்கலம்
என்பகை முடித்தருள்வாய் தென்பழநி ஆண்டவா!



# செந்திலாண்டவர் பதிகம்

அருட்கவி கு. செ. இராமசாமி எம். ஏ. சிவகங்கை,

பேர்படைத்த கந்தனே! பிராணன்படைத்த செல்வனே
சூர்படைத்த ஆணவத்தைத் தூள்படைத்த வீரனே!
சீர்படைத்த செந்தமிழ் தினம்படைக்க அருள்வாய்-
கூர்படைத்த வேலவனே குலாவுசெந்தில் நாதனே

ஆறுகோணச் சக்கரம்! அமைந்த ஆறும் அட்சரம்:
ஆறுவாசல் தத்துவம், அவைகடந்த அற்புதம்!
ஆறும்ஆறும் ஆறும்ஆறும் ஆறும்ஆறும் ரூபனே!
ஆறுதாயர் பாலனே கண் பாரும்செந்தில் நாதனே

அகம்குழைந்த சங்கரன் புயங்கமாலை பாடினான்!
புகுந்தஏவல் காசநோய் அகன்றுநன்மை தேடினான்!
இகம்-பரம் இரண்டிலும் நலம்தரும்மகேசனே
சுகந்தகந்த புஷ்பமே உகந்தசெந்தில் நாதனே

ஆதிநான் மறைத்திறம் அறிந்திலேன்; அறிந்திலேன்
காதலான செந்தமிக் கருத்தையும் உணர்த்திலேன்:
பேதை நான் தினம்தினம் பிதற்றலும் தணிந்திலேன்:
ஈதுநீ பொறுத்தருள் இசைந்தசெந்தில் நாதனே

மூங்கைபால் இரங்கியே முழங்கவைத்த தேவனே
தாங்கொணு வயிற்றுநோய் தணித்தசக்தி பாலனே:
ஏங்கி ஏங்கி ஏங்கி எய்தினேன் என் ஈசனே
தீங்கொம் விலக்குவாய் சிறந்தசெந்தில் நாதனே

தொல்லைசெய்யும் நோயில்லை; துயர்பகை வினை இல்லை:
அல்லல் செய்யும் தீயசக்தி அட்டமத்துச் சனிஇல்லை:
இல்லைஇல்லை என்றுபூசும் இலையில்நீ றலாமலே
செல்வமேதும் இல்லையே திகழ்ந்தசெந்தில் நாதனே!

வேறுவேறு மந்திரங்கள் ஆறெழுத் தடக்கமாம்:
மாறுதேவ தேவியர்நின் வடிவிலே அடக்கமா:
கூறுபத்துப் ஆறிமான பேறுநல்கும் ஈசனே
தேறும் என்னை ஆதரிக்க வாரு செந்தில் நாதனே

தொட்டதொட்ட இடமெலாம் துலங்குகிறன் சோதியே
முட்டமுட்டமடியிலே முந்தளிக்கும் தேனுவே
எட்டஎட்ட நிற்பதென்ன ஏழைகள்பம் காளனே
கிட்டகிட்டவாரும்என்னை ஆளும்செந்தில் நாதனே

மாரனைத் தடித்தஎந்த மைந்தனான கந்தனே
சூரனைக் கிழிந்துவாகை சூடும்வெற்றி வேலனே
சோரனை எவருத்தும் துட்டனைத் தொலைக்க நீ
வீரவேல் எடுத்தல்வேண்டும் வேண்டும் செந்தில் நாதனே

அஞ்சிநான் நடுங்கும்போதில் அழகுவேல் எடுத்துவா
வஞ்சமாம் அகப்பை -பு-றப்பகை மடித்துவா
சஞ்சலங்கள் போக்கிவா என் நெஞ்சில் இன்பம் தேக்கிவா
தஞ்சமென்று சேடன்வந்(து) இறைஞ்சும் செந்தில் நாதனே

ஆழிவாய் இருந்தவா அருந்தவா என் ஆண்டவா
காழிவாய்ப் பிறந்தருான ஞானமே மொழிந்தவா
வாழி தாயார் சூழவேண்டும் வரமெலாம் வழங்கவா
ஊழிநாதன் பூசனை உவந்தசெந்தில் நாதனே



# சரணம் சரணம் முருகையா

மலைக்குடி வேலன் இன்று கடல் தாண்டினான்
லண்டன் மாநகரில் வந்து குடியேறினான்
சிலைவடிவாக வந்து வரம் நல்கினான்-தமிழர்
திருவருள் கொள்வதற்கு துணையாகினான்

எங்கிருந்தும் அவனை மறப்பதில்லை-தமிழர்
ஏற்றும் திருவிளக்கு அணைவதில்லை-பொங்கும்
தரும வெள்ளம் குறைவதில்லை-தமிழர்
புகழும் பொருளும் என்றும் அழிவதில்லை

நாகரிகம் வளர்ந்த மேற்கினிலே-குமர
நாயகன் கோயில் கண்டார் ஆசையிலே
தேக உழைப்பை சிலர் உவந்து தந்தார் - சிலர்
திரவியம் தந்ததுடன் தமையும் தந்தார்

ஆறுபடை வீடு என்று அழைத்து வந்தோம் - ஒரு
அற்புத வீட்டை இங்கே படைத்து விட்டோம்
ஏழுபடை வீடு என்று தொடர்ந்து செல்வோம் - லண்டன்
எழுப்பிய கோவிலையும் சேர்த்துக் கொள்வோம்

இலங்கை முருகனுக்கோர் கதிர் காமம் பொருள்
இலங்கும் மலேசியாவில் பல கிராமம்
துவங்கிடும் லண்டனுக்கும் தொடர்ந்து வந்தான் - எங்கள்
சுவாமிநாதன் அருளை சுக்கவந்தான்

—★—

# ஒன்றுமில்லை என்று நினைத்தேன்

முருகா! முருகா! வேல் முருகா
முருகா! முருகா வேல்முருகா

கல்லுக்குள்ளே ஒன்றுமில்லை எனவிருந்தேன்
உள்ளுக்குள்ளே தேரை என்றுகண்டு வியந்தேன்
அங்கும் உண்டு ஈரம் என்று இன்று உணர்ந்தேன்
அன்பிருந்தால் எங்கும் உண்டு என்று தெளிந்தேன் (முருகா)

இல்லை இல்லை இல்லை என்று அன்று புகன்றேன்
எல்லாம் கல்லு செம்பு என்று சொல்லி இகழ்ந்தேன்
வெண்ணெய் பாலுக்குள்ளே என்று கண்டு வியந்தேன்
வேலா! உன்னைக் காணும் வழி இன்று அறிந்தேன் (முருகா)

எங்கே எங்கே எங்கே என்று கேட்டுத் தேடி திரிந்தேன்
இல்லா இடம் எங்கும் சென்று அலைந்தேன்
அங்கும் இங்கும் எங்கும் உள்ள உண்மை அறிந்தேன்
இங்கும் உன்னை கண்டு போற்ற எண்ணி நடந்தேன் (முருகா)

ஆண்டு தோறும் கார்த்திகையில் மாலை அணிந்தேன்
ஆறுமுகம் உன்னை எண்ணிபாடி மகிழ்ந்தேன்
வேண்டி வரும் அன்பருடன் கூடி நடந்தேன்
வெய்யில் பனி எண்ண மில்லை தாங்கித் தொடர்ந்தேன்

நெஞ்சுறுதியை அளக்க நீ நினைத்தாயோ
நேற்றுவரை சோதித்து நீ முடித்தாயோ
தஞ்சமென்று வந்தப்பின்பும் தவிக்கவிட்டாய்
சன்னதியில் முன்பு நின்றும் புலம்பிவிட்டாய்

சோதனையை பேதை மனம் உணரவில்லை
துன்பத்தையே கண்ட உள்ளம் பொறுக்கவில்லை
நீ துணை என்றே நடந்தும் உறுதியில்லை
நெஞ்சம் தளர்ந்தேன் நிலைமை அறியவில்லை (முருகா)

படிப்படியாக என்னை உயர்த்தி விட்டாய்
பையப் பையவே இருளை அகற்றி விட்டாய்
வெடிக்கசையாத கல்லு மனதை எல்லாம்
வெய்யில்பட்ட நெய் யெனவே உருக வைத்தாய் (முருகா)

பகல் கனவைக் கூடப்பலிக்க வைத்தாய்
பட்ட மரமும் தழைத்து செழிக்க வைத்தாய்
அகல் விளக்காய் இருத்த என்னை எடுத்தாய்
அண்ணாமலை விளக்காய் நிகழ விட்டாய் (முருகா)

நினைத்ததை எல்லாமே நடத்தி வைத்தாய்
நீண்டதுன்பம் தொடர்கதை முடிய வைத்தாய்
இணையடித் தாமரையில் விழுந்து விட்டேன்
இன்று உன்னை ஏதோ கொஞ்சம் உணர்ந்து விட்டேன் (முருகா)

உந்தனருள் இன்னதென்று உணர்த்திவிட்டாய்
உள்ளத்துக்குள் கோவில் ஒன்று அமைக்க வைத்தாய்
சுந்தர வேலோடு அங்கே எழுந்தருள்வாய்
தோகை மயில் வாகனனே சரணம் கந்தா (முருகா)



# தந்தருள்வான் எந்தனுக் ஆறுதலை

முருகா முருகா வேல் முருகா
முருகா முருகா வேல் முருகா

நல்ல தமிழ் சொல்லெடுத்து நாளும்பாடு
நம்தலைவன் முருகனையே நாடியோடு
வல்லகதிர் வேலவனும் வள்ளியோடு
வந்துநலம் தந்தருள்வான் வாகையோடு

அஞ்சுவகைக் கனியெடுத்து அமுது செய்வோம்
ஆறுமுகன் மேனியிலே தொழுது பெய்வோம்
கொஞ்சுமெழில் குமரனுக்குப் பூக்கள் கொய்வோம்
கூறுதமிழ்ச் சொல்லெடுத்துப் பாக்கள் நெய்வோம்

தண்ணாரும் தணிகைமலை நடந்து செல்வோம்
சாலைவழித் துன்பமெல்லாம் கடந்து செல்வோம்
கண்ணான முருகனையே கொஞ்சி மகிழ்வோம்
கருணைமழை பொழிகவெனக் கெஞ்சிக்கேட்போம்

கல்லழுத்தித் தாரரித்துத் தோலுந்தேயும்
காலிரண்டும் கொப்பளித்துக் கன்றிப்போகும்
வெல்லமெனுங்கந்தனவன் பேரைக்கூவ
வேதனைகள் தீர்ந்துநடை வேகங்கூடும்

கந்தனையே சொந்தமென எண்ணும்போது
கவலையெனும் கடலதுவும் வற்றிப்போகும்
சிந்தனையில் தெளிவுவரும் செல்வம் சேரும்
செருமுனையில் பகையளித்து வெற்றி சேரும்

அண்ணனுக்கும் யானையெனும் மாறுதலை
அப்பனுக்கும் கங்கையெனும் மாறுதலை
சண்முகனாம் கந்தனுக்கு மாறுதலை
தந்தருள்வான் எந்தனுக்கும் மாறுதலை

அன்புசெய்யச் சக்தியெனும் அன்னையுண்டு
ஆலமுண்ட கண்டனெனும் தந்தையுண்டு
தன்வயறு சாயவரும் அண்ணனுண்டு
சாரங்க பாணியெனும் மாமனுண்டு

ஆடகத்தில் செய்ததொரு தேருமுண்டு
அழகுமிகு தோரணங்கள் யாவுமுண்டு
ஆடிவரத் தோகைமயில் நாளுமுண்டு
ஆதிசக்தி தந்ததொரு வேலுமுண்டு

கட்டியங்கள் கூவிவரச் சேவலுண்டு
கடம்பனுடன் இடும்பனுமே காவலுண்டு
கட்டிவருங் காவடிகள் ஆடலுண்டு
கறந்த பசும் பாற்குடங்கள் கூடவுண்டு

பார்புகழும் ஆறுபடை வீடுமுண்டு
பட்டாடை ஆபரணங்கள் கோடியுண்டு
மார்பினிலே கதம்பமலர் மாலையுண்டு
மணியினையுஞ் செஞ்சதங்கை காலிலுண்டு

வள்ளிமலர் தெய்வானை கொஞ்சலுண்டு
மாமலைகள் எங்கெங்கும் மஞ்சமுண்டு
உள்ளுருகும் அடியவர்கள் கெஞ்சலுண்டு
உனையென்றும் மறவாத நெஞ்சமுண்டு

சேவற்கொடி கண்டவடி வேலனுக்கு
தேவையான யாவுமுண்டு என்று சொல்லும்
சேவகனின் இந்தக்கவி பாடிவருவார்
சிங்கார வேலனருள் கோடி பெறுவார்



# நாற்பத்தெட்டுசீர்கழி நெடிலயாசிரிய விருத்தம்

காருற்றதென்பரங் குன்றமதில் விளையாடும்
கருணையா னந்தகுருவே

காரணம தானபரி பூரணக்ரு பாகரா
கடல்வண்ண னுக்குமருகா

கமலத்தில் வந்தவய னைச்சிறையில் வைத்தவா
கமழ்பழனி யம்பதியனே

கயலொத்த விழிமா தெனுங்குறப் பெண்ணுக்குக்
கான்வேங்கை மரமானவா

கதியானபொதிகைவரை தனிலுறையு மிருடிக்கு
கலையேற் றியபண்டிதா

கங்கா தரன்செவியில் ஒங்கார பிரணவம்
கற்பித்த சாமிநாதா

கனனல்வில் லிக்கருமை மைத்துன சமணரைக்
கழுமுனையில் விட்ட குமரா

கண்ணு யிரமபெற்ற அண்மர்கோ னுக்குவரும்
கலியகற் றியதெய்வமே

சீருற்ற நின்மகிமை செண்டனிட் டடியவர்கள்
செப்புவிண் ணப்பமதுகேள்

செய்வினை கொண்டதாற் கருவிலுருவாகிய
சென்மித்து வந்தபின்பு

சிசுவென்று முலையுண்டு பதினறு வயதினிற்
செந்தமிழ்க் கலைபடித்துன்

செகமீதின் மெஞ்ஞான தெய்வமே யுன்றனைத்
தேடிவந் தேனடுத்தும்

தேனுற்ற தாமரைச் சரவணப் பொய்கைதனில்
தீர்த்தமதுதா னுடியும்

சிங்கார மாகளவர் கிரியைவல மாவந்து
சிந்தையின் துயரமெல்லாம்

செப்பியுங் கேளா திருப்பதே னேவுனது
சிந்தையி லிரக்கமில்லையோ

திரமாக வுன்றந்தை மார்கண்ட னுக்காக
சிரஞ்சீவி கொடுக்க வில்லையோ

ஏருற்ற பன்னிரு புயத்தனே தெந்தினம்
செய்தென்னை யேக்கிறாயோ

இதுவென்ன கலியுகக் கொடுமையோ வுனையன்றி
யின்னமொரு தெய்வமுண்டோ

ஏதாயி னுஞ்சற் றிரங்காத நெஞ்சமோ
என்மீதில் என்ன வாதா

இன்பமிகு கும்பமுலை மங்கைய ரிடந்தனி
லிணங்கவே வைத்தநினைவா

வீராறு காதுக்கு ஏழைநான் சொன்னமொழி
எள்ளளவும் கேட்க விலையோ

எண்டிசையு மண்டபகி ரண்டமு முன்றனரு
ளில்லால் நிலை நிற்குமோ

இடையுடை நிகழ்ந்திடி லிருக்கை மூபசார
மேவரா கிலுஞ் சொல்வரோ

ஏழைக் கிரங்குமுரு கேசனென் றுன்னையே
இவ்வுலகெ லாஞ்சொல்லுதே

மேருற்ற புயசூரன் மார்பைத் தொளைத்திட
வேல்தொட்ட ரணசூரனே

வித்தா கடம்பா வத்திமுக னுக்கிளைய
வித்தகா சக்திபுதல்வா

வேலைக்கு ளேமகர மீனுக வந்தன்று
விளையாடி நின்றபரனே

விந்தையுட னேசைவமந்திரம் விளங்கவே
விபூதியணி சம்பந்தனே

மேதினியில் ஆதாரம் உன்றருளிய பாதாரம்
மெய்யன்றி வேறில்லையே

வேண்டிய வரந்தந்து தொண்டரைக் காத்தருள
வேளையிது நல்லசமயம்

வெள்ளுரை திருப்புகழ் அருணகிரி மகிழவே
விளையாடு மயில்வாகனு

விஞ்சமுனி வோர்கள்தொழு மஞ்சலென் அருள்புரியும்
வேலா யுதக்கடவுளே



# கருப்பர் வாரார்

வாராரய்யா வாராரு
    கருப்பரிங்கே வாராரு
வாராரய்யா வாராரு
    கருப்பரிங்கே வாராரு

அள்ளீ - முடிச்ச கொண்டையப்பா
    அழகு - மீசை துள்ளுதப்பா
வல்ல - வேட்டிப் பட்டுடனே
    வாரார் - ஐயா ராசாப்போல

(வாராரய்யா வாராரு

ஆளு - யரம் அரிவாளாம்
    அதுக் - கேத்த கம்பீரமாம்
காலிலே முள்ளுச் செருப்பாம்
    கருப்பனுக்கே தனிச்சிறப்பாம்

(வாராரய்யா வாராரு

வீச்சரிவாள் கையிலுண்டு
    வேகமான குதிரையுண்டு
சுற்றிவரும் பகையளிக்கச்
    சுக்குமாந் தடியுமுண்டு

(வாராரய்யா வாராரு)

இடுப்பிலே சலங்கையுண்டு
    இடிமுழக்கச் சிரிப்புமுண்டு
வக்கிலே வலிமையுண்டு
    வற்றாத கருணையுண்டு

(வாராரய்யா வாராரு)

கையிலே சவுக்குமுண்டு
    கனகமனிச் சலங்கையுண்டு
பாற்கடலில் பள்ளிகொண்ட
    பரந்தாமன் நாமமுண்டு

(வாராரய்யா வாராரு)

சந்தனமுண்டு ஜவ்வாதுண்டு
    சாம்பிராணி வாசமுண்டு
சம்பங்கி ரோஜாமுல்லை
    மணக்குதப்பா இங்கே இப்போ...

(வாராரய்யா வாராரு)



# கருப்பர் துணை

பங்காளி மார்கூடிப் பள்ளயங்கள் போடுகிறோம்
திங்கட் கிழமைஇன்று தெண்டனிட்டு பாடுகிறோம்
எங்கள் கலிதீர்க்கச் செங்கிடாய்க் கருப்பண்ணனே
வங்கப் பெருங்கடலே வருவாய் இதுசமயம்

தினைக்கதிர் மீசையினை திருகிவிடும் இடக்கரத்தோய்
வினைஅறுக்க வலக்கரத்தில் வெட்டரிவாள் கொண்டவனே
வெண்முத்தாய் வருகின்ற வெள்ளைக் குதிரையிலே
வண்ணப் படைப்பேற்க வருவாய் இதுசமயம்

கருங்கச்சை தான்கட்டிக் காற்றுப் பரி ஏறி
வரும்பவிசைப் பார்ப்பதற்கு வாசல் திரந்துவைத்தோம்
கருங்கல்மணம் உருக்கட்டியங்கள் கூறுகின்றோம்
வரம்தரவே கருப்பையா வருவாய் இதுசமயம்

கைமேல் பலன்காண கண்ணுக்குள் உனேக்காணத்
தைமாதம் படைக்கின்றோம் தமிழுக்கு முதல்மாதம்
பொய்யா மனத்துள் பூச்சரங்கள் தான்கொடுத்து
வையாமல் வைப்பவனே வருவாய் இதுசமயம்

கந்தவடி மணக்கக் காலடியில் பிழைகிடக்கச்
செந்தமிழால் முடிசூடும் செங்கிடாயக கருப்பண்ணனே
வெந்தடியார் வாடுகிறோம் வேலங்குடியை விட்டு
வந்தவினே தீர்க்க வருவாய் இதுசமயம்

பட்டியிலே பிறந்தவர்கள் பர்மாவில் கப்பல்விட்டு
கொட்டிக்குவிந்தவர்கள் கொடிகட்டிப் பறந்தவர்கள்
கெட்டழிந்து போவதுவா கேள்விக்கு நாயகனே
வட்டிக்கு வட்டியென வருவாய் இதுசமயம்

புன்செய்வயல் செழிக்கப் புள்ளி பெருகிவர
அஞ்சய்யா வீட்டுமக்கள் அஞ்சுதலைப் போக்குதற்கு
மஞ்சு நிறந்தோய் மரிக்கொழுந்து வாசகனே
வஞ்சனைகள் செய்யாமல் வருவாய் இதுசமயம்

சூடம் எரிய அதில் சூழ்ச்சி கலந்தெரிய
நாடும் திருமகளே வீடும் புகுந்துவரக்
கூடுகிற ஆண்டிசெட்டி குடும்பத்தை கனியாக்கும்
வாடாமலரே வருவாய் இதுசமயம்

ஆடுகளை வெட்டுவதும் அநியாயம் கோழிகளைக்
கூடவே வெட்டுவதும் கொலைஆகும் என்பதனால்
பாடில்லா சைவப்படைப் பேற்கும் ஏ! கருப்பா
வாடா என அழைத்தேன் வருவாய் இதுசமயம்

பில்லி கொடுஞ் சூனியங்கள் பேயோடு பிசாசெல்லாம்
நில்லாமல் ஓட்டுகிற நெடிய கருப்பண்ணனே
பொல்லாத உளிவீரன் பூச்சூடிக்குலம் காக்கும்
வல்லி தங்கம்மாளோடு வருவாய் இதுசமயம்

பன்னீர் இளநீர் பாலால் அபிஷேகம்
பண்ணுவது போதலியா? பறந்துவரத் தோணலியா
என்ன உனக்கு எங்களைப்போல் கல்மனதா
உன் குறையைச் சொல்லிடவே ஓடிவா இதுசமயம்

ஊதுபத்தி வாசனையும் உட்புகையும் சாம்பிராணி
தோதுகைகுப் போதலியா? தூய தமிழ்ப்பாட்டைத்
தூது விட்டால் வருவாயா? தொகையே தான் கேட்பாயா?
வாதெதற்கு நமக்குள்ளே வருவாய் இதுசமயம்

பொல்லாப் பிழையும் பூத்தூவி நின்னடியில்
நில்லாப் பிழையும் நின் திருநீறு அள்ளிக்
கொள்ளாப் பிழையும் குதி போட்டு ஓடவைக்க
வல்லவனே கருப்பையா வருவாய் இதுசமயம்



# கல்யாணிநீ

பேராசிரியர் : அருட்கவி கு. செ. இராமசாமி எம். ஏ.,
சிவகங்கை

ஸ்ரீசக்ர வாகினி சிம்மாசினி
சிவசக்தி ரூபிணிநீ கல்யாணிநீ
ஓம்சக்தி ஸ்ரீராஜ ராஜேஸ்வரி
உன்பாதம் சரணடைந்தேன் மாகேஸ்வரி (ஸ்ரீசக்ர)

இருகைக ளால்தொடுத்த பூமாலைகள்
இதயத் தினுல்தொடுத்த பாமலைகள்
அருள்பொங்கும் தீபங்கள் ஏற்பாயம்மா
அடியேனை எந்நாளும் காப்பாயம்மா (ஸ்ரீசக்ர)

அம்மாஎன் இல்லத்தில் அடியெடுத்துவா
அழகான வெண்கொற்றக் குடைபிடித்துவா
சும்மாநீ வரலாமோபகை முடித்துவா
துயரங்கள் யாவினுக்கும் விடை கொடுத்துவா (ஸ்ரீசக்ர)

செந்தா மரைப்பூவில் மகராணியாம்
சிங்கத்தில் ஏறிவந்தால் மாகாளியாம்
வெண்தா மரைப்பூவில் மகராணியாம்
விண்ணோடு மண்ணாளும் கலைவாணியாம் (ஸ்ரீசக்ர)

தீர்த்தங்கள் அத்தனையும் கமலாலயம்
தீபம் தெரிந்தஇடம் அருணாசலம்
வாய்த்த சபைகள் எல்லாம் பொன்னம்பலம்
மாதா பராசக்தி நீஎன்பலம் (ஸ்ரீசக்ர)

தாய்நீ மனம் வைத்தால் தங்கம்வரும்
தனிவழிக்குத் துணையாகச் சிங்கம்வரும்
சேய்வீட்டில் கல்யாண மேளம்வரும்
திருநாட்டை அரசாளும் யோகம்வரும் (ஸ்ரீசக்ர)

# ஸ்ரீ ராஜஸ்வரி

அருட்கவி கு. செ. இராமசாமி M. A.

சிம்மேந்திரமத்திமம் ஆதி

பல்லவி

ராஜேஸ்வரி - அம்மா
பரமேஸ்வரி
புவனேஸ்வரி - அம்மா
ஜகதீஸ்வரி (ராஜேஸ்வரி)

சரணங்கள்

ஸ்ரீசக்ர பீடத்தில் ராஜேஸ்வரி
சிவசக்தி ரூபத்தில் பரமேஸ்வரி
ஓம்சக்தி ஓம்சக்தி புவனேஸ்வரி
உலகாளும் மாசக்தி ஜகதீஸ்வரி (ராஜேஸ்வரி)
அருளாளர் நெஞ்சங்கள் சிம்மாசனம்
அறுபத்து நான்குகலைவெண்சாமரம்
ஒரு நான்கு வேதங்கள் சங்கீர்த்தனம்
ஓங்காரநாதம் அம்மா உன் தாண்டவம் (ராஜேஸ்வரி)
பூவுக்கும் பொட்டுக்கும் துணையானவள்
பொன்மஞ்சள் குங்குமத்தில் நிலையானவள்
சேவிக்கும் பெண்களுக்குத் தாயானவள்
திருமாங்கல் யம்என்னும் வாழ்வானவள் (ராஜேஸ்வரி)
குளம்போல நெய்யூற்றி விளக்கேற்றுவோம்
குடும்பத்தில் பீடபத்தியில் குடியேற்றுவோம்
வளம்யாவும்ப் தரவேண்டி மலர் தூவுவோம்
மகராணி நீயேஎன்று கவிபாடுவோம் (ராஜேஸ்வரி)
தீபத்தில் குடிகொண்டராஜேஸ்வரி
திலகத்தில் முகம்காட்டு ரமாஜேஸ்வரி
ஆபத்தில் ஓடிவரும் ராஜேஸ்வரி
அருள் செய்ய வேண்டும் அம்மா நீயேகதி (ராஜேஸ்வரி)

# சரணம் அம்மா

சரணம் அம்மா! தாயே சரணம் அம்மா!
சரணம் அம்மா! தாயே சரணம் அம்மா!

ஸர்ப்ப வடிவாக வந்த சௌந்தரியே
ஸாதுஸா ரட்சகியே சரணம் அம்மா!
ஸர்ப்பம் எல்லாம் உந்தன் ஆபரணம்
சங்கரன் மோகினியே ஸங்கரியே! (சரணம் அம்மா)

ஆதிசேஷன் ரூபினியே ஆனந்தவல்லி
ஆதிபராசக்தி அம்மா அபிராமி
ஜோதிநாக வடிவானாய் சிவகாமி
சோதனையை வெல்லவைப்பாய் காமாட்சி! (சரணம் அம்மா

ஸர்ப்பத்தைக் குடையாக அணிந்தவளே
ஸ்ருங்காகிரி வாஸினியே சாரதா தாயே!
சங்கரனும் ஐங்கரனும் ஆறுமுகனும்
அணியும் ஆபரணமாய் அமைந்தவளே! (சரணம் அம்மா

ஆறுமுகன் காலடியில் அமர்ந்தநாகம்
ஆதிமூலம் துயில்கொள்ளும் ஆதிசேஷன்
புற்றுருவல் வந்தால் புவனேஸ்வரி
பூவுலகெல்லாம் ஆளும் பராசக்தி (சரணம் அம்மா)

ஸர்ப்பதோஷம் போக்கியே கருணைசெய்வாய்
ஸந்தான சௌபாக்கியம் அளித்திடுவாய்
மங்களக் கன்னிப்பெண்ணின் தோஷமபோக்கி
மாங்கல்ய பாக்கியத்தை வழங்கிடுவாய் சரணம் அம்மா)



# ஐயப்பன் கவசம்

## காப்பு

அரிஹரபுத்திரனே, ஆனந்த ரூபனே
இருமூர்த்தி மைந்தனே, அறுமுகன் தம்பியை
சபரிகிரீசனே, சாந்த ஸ்வரூபனே
தினம தினம் போற்றிப் பணிந்திடுவோமே
ஐயப்ப தேவன் கவசமிதனை
அநுதினம் சொல்ல அல்லல்கள் ஒழியும்
தினம் தினம் துதிக்கத் தீரும் வினையெல்லாம்
நாடிய பொருளும் நலமும் வருமே.

## நூல்

மண்ணுலகெல்லாம் காத்தருள் செய்ய
மணிகண்ட தேவா வருக வருக
மாயோன் மைந்தா வருக வருக
ஐங்கரன்சோதர ஐயப்பா வருக

புலி வாஹனனே வருக வருக
புவியெல்லாம் காத்திட வருக வருக
பூரணை நாதனே வருக வருக
புண்ணிய மூர்த்தியே வருக வருக

பூத நாயகா வருக வருக
புஷ்கலை பதியே வருக வருக
பொன்னம்பலத்துறை ஈசா வருக
அடியாரை காக்க அன்புடன்வருக

வருக வருக வாசவன் மைந்தா
வருக வருக வீர மணிகண்டா
வஞ்சனை நீக்கிட வருக வருக
வல்வினை போக்கிட வருக வருக

ஐயம் தவிர்த்திட ஐயப்பா வருக
அச்சம் அகற்றிட அன்பனே வருக
இருவினை களைந்தே எனையாட்கொள்ள
இருமூர்த்தி மைந்தா வருக வருக

பதினெண்படியை மனதில் நினைக்க
பண்ணிய பாவம் பொடிப் பொடியாகும்
ஐயப்பா சரணம் என்றே கூறிட
ஐம்பூதங்களும் அடிபணிந்திடுமே

சபரிகிரீசனை நினைத்தே நீரிடத்
துன்பங்கள் எல்லாம் தூள் தூளாகும்
சரணம் சரணம் என்றே சொல்லிட
சித்திகள் யாவும் வந்தடைந்திடுமே

பம்பையின் பாலன் பெயர் சொல்லிடவும்
பகைவர்கள் எல்லாம் பணிந்தே வணங்குவர்
ஐயப்பன் பாதம் அநுதினம் நினைக்க
அவனியிலுள்ளளோர் அடிபணிந்தேத்துவர

சரணம் சரணம் ஐயப்பா
சரணம் சரணம் சபரி கிரீசா
சரணம் சரணம் சத்குரு நாதா
சரணம் சரணம் ஸ்வாமியே சரணம்

## வேண்டுதல்

சிவனார் மகன் என் சிரசினைக் காக்க
நெடுமால் மைந்தன் நெற்றியைக் காக்க
கஜமுகன் தம்பி என் கண்ணினைக் காக்க
நாரணன் பாலன் நாசியைக் காக்க

இருமூர்த்தி மைந்தன் என் இருசெவி காக்க
வாபரின் தோழ வாயினைக் காக்க
பம்பையின் பாலன் பற்களைக் காக்க
நான்முகப் பூஜ்யன் நாவினைக் காக்க

கலியுக வரதன் என் கழுத்தினைக் காக்க
குமரன் தம்பி என் குரல்வளைக் காக்க
புஷ்கலை நாதன் புஜங்களைக் காக்க
முக்கண்ணன் பாலன் முழங்கையைக் காக்க

வீரமணிகண்டன் விரல்களைக் காக்க
கயிலை மைந்தன் கைகளைக் காக்க
மணிகண்ட தேவன் மார்பினைக் காக்க
வன்புலி வாகனன் வயிற்றினைக் காக்க

முழுமுதற் கடவுள் என் முதுகினைக் காக்க
இருமுடிப்பிரியன் என் இடுப்பினைக் காக்க
பிரம்பாயுதன் என் பிட்டங்கள் காக்க
தர்மசாஸ்தா என் துடைதனைக் காக்க

முருகன் சோதரன் முழங்கால் காக்க
கற்பூர ஜோதி என் கணைக்கால் காக்க
பந்தள பாலன் பாதத்தினைக் காக்க
விஜயகுமாரன் விரல்களைக் காக்க

அன்னதானப் பிரபு அங்கமெல்லாம் காக்க
ஆரிங்கா (வ்) ஜோதி அன்புடன் காக்க
கட்டாளரூபி காலையில் காக்க
நவக்ரஹ நாதன் நடுப்பகல் காக்க

மாலின் மகனார் மாலையில் காக்க
அரிஹர சுதனார் அந்தியில் காக்க
இன்பமய ஜோதி இரவினில் காக்க
எரிமேலி சாஸ்தா என்றுமே காக்க

அரியின மகனார் அநுதினம் காக்க
நடராஜன பாலன் நாள்தோறும் காக்க
வாசவன் செல்வன் வலப்புறம் காக்க
இருமுடி ஈசன் இடப்புறம் காக்க

காக்கக் காக்கக் கருணையால்க் காக்க
பார்க்க பார்க்க என் பாவம் பொடிபட
இம்மையும் மறுமையும் இல்லா தொழிந்திட
ஈசன் மகன் எனை என்றுமே காக்க

கொடிய விஷங்களும் கொள்ளை நோய்களும்
குருதியைக் குடிக்குப் துஷ்டப் பேய்களும்
காந்தமலை தனைக் கருத்தில் கொண்டிட
கலங்கி மறைந்திடக் கருணை புரிவாய்

பில்லி சூனியம் லவித வஞ்சனை
பம்பையின் பாலன் பெயர்சொல் லிடவும்
பஞ்சாய்ப் பறக்க வரமெனக் கருள்வாய்
பயங்களைப் போக்கி அபயம் அளிப்பாய்

வாதம், பித்தம், சிலேட்சுமத்துடனே
நல்லோர் உறவும் நாளும் அருள்வாய்
நல்ல மனத்துடன் உனைநான் துதிக்க
நித்தியமும் அருள் வாய் சபரி கிரீசா

கல்வியும், செல்வமும்: கள்ளமில்லா மனமும்
நல்லோர் உறவும் நாளும் அருவாய்!
நல்ல மனதுடன் உனைநான் துதிக்க
நித்தியமும் அருள் வாய் சபரி கிரீசா

காமம், குரோதம், லோபம், மோஹம்
மதமாச்சர்ய மெனும் அறுபெறும் பேய்கள்
என்றுமே என்னை அனுக விடாமல்
ஐயப்ப தேவா வரமெனக் கருள்வாய்

சூது, பொறாமை, பொய் கோபமில்லாமல்
சோரம் லோபம் துன்மார்க்கம் கல்லாமல்
வேத நெறிதனை விலகி நில்லாமல்
வீரமணி கண்டா வரமெனக் கருள்வாய்

மூப்பும், பிணியும், வறுமையும், பசியும்
வந்தெனை வாட்டி வதைசெய்யாமல்
உள்ளன் புடனே உன்திரு நாமம்
அநுதினம் சொல்ல அருள் தருவாயே

**நமஸ்காரம்**

அரிஹரபுத்ரா அன்பா நமோ நமோ
சபரிகிரீசா சாஸ்தா நமோ நமோ
பதினெண் படிவாழ் பரமா நமோ நமோ
ஐங்கரன் சோதரா ஐயப்பா நமோ நமோ

பொன்னம் பலத்துறை புண்ணியா நமோ நமோ
புலிப்பால் ஈந்த புண்ணியா நமோ நமோ
சுரிகா யுதமுடைச் சுந்தரா நமோ நமோ
மஹிஷிமர்த்தன மணிகண்டா நமோ நமோ

சரணம் சரணம் சபரி கிரீசா
சரணம் சரணம் சத்ய ஸ்வரூபா
சரணம் சரணம் சர்வ தயாளா
சரணம் சரணம் ஸ்வாமியே சரணம்

**ஸ்வாமியே சரணம் ஐயப்பா !**



## முருகா தருவாய்

யாஅம் இரப்பவை
பொருளும், பொன்னும், போகமும்
அல்ல "நின்பால் அருளும், அன்பும்
அறனும் மூன்றும் உருள் இணர்க
கடம்பின் ஒலி தாராயே"

-புலவர் இளவெயிளனார் பரிபாடல்

# கிளிக் கண்ணி

குரு. சுப்பராய சுவாமிகள்

ஐந்து கரனுக் கிளைய வாறுமுக வேலவனைச்
செந்திற் குகந்தவனைக் கிளியே
சோமனந் தேடுத டி

மாலே வடிவெலவர்க்கு வரிசையாய் நானெழுதும்
ஓலையுங் கிறுக்காச்சுத டி கிளியே
என்னுள்ள முங்கிறுக்காச்சுத டி

ஐந்து வயதினிலே யறியாப் பருவத்திலே
பிஞ்சிலே கூடினன டி கிளியே
பிரியமனங் கூடுதில்லே

எட்டாப் பழமடியோ இறக்காதனவடியோவு
வட்டாத வானநதமே கிளியே
மான மருகன்றந்தசுகம்

வள்ளிகணவன்பேரை வழிப்போக்கர் சொன்னாலும்
உள்ளங் குழையுத டி கிளியே
ஊனு முருகுத டி

எட்டி யெட்டிப்பார்ப்பவர்க்கு எட்ட எட்ட நிறகுமது
சுட்டுக் கடங்காத டி கிளியே
சுநதரத்தின் பேருருவம்

கன்னல் மதுரமொழிக் கட்டழகன் என்குரவன்
என்னபொடி போட்டானோ டி கிளியே
இடைபிரியக கூடுதில்லே

காமமயிலேறு மென்றன கட்டழகன் றந்து வரும்
ஆனந்த யெனப்தெல்லாம் கிளியே
அமுது தவிப்பதோவ டி

மாடுமனை போனாலென்ன மக்கள் சுற்றம் போனாலென்ன
கோடிசெம்பொன போனாலென்ன                                        கிளியே
அவன குறுநகை போதும்  டி

வேதத்தின் சாகைகட்கு மேலானா னாதலினால்
விசாகனெனப பெயர் கொண்டான்                                        கிளியே
வேலெடுத்த மூலகுரு

எங்கும் நிறைந்திருப்போன் எட்டியுமெட்டாதிருப்போன்
குங்கும வர்ணனடி                                        கிளியே
என் குமரப்பெருமானடி

மாமயிலோன் வாழக நாம் வருநதாது வகைதநத
நீ மனமே வாழ நதிருப்பாய்
நீழிக் காலம் வரை   கிளியே



**அருட்காசசி**

**சிந்து**

**திருச்சிற்றம்பலம்**

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில் குயில் ஆச்சுத  டி  அக்கச்சி
மயில் குயில் ஆச்சுத  டி
துள்ளலை விட்டுத் தொடங்கினேன் - மன்றாடும்
வள்ளலைக் கண்டேன  டி அக்கச்சி
வள்ளலைக் கண்டேன  டி
சாதி சமயச் சழுக்கை விட்டேன் அருவ
சோதியைக் கண்டேன  டி  அக்கச்சி
சோதியைக் கண்டேன  டி
பொய்யை ஒழிததுப் புறப்பட்டேன் மன்றாடும்
ஐயரைக் கண்டேன  டி அக்கச்சி
ஐயரைக் கண்டேன  டி

**திருச்சிற்றம்பலம்**

**(ராமலிங்க சுவாமிகள்)**

## மலைவாசன்

மலையப்பா மலையப்பா சபரிமலையப்பா - இரு
முடிகள் தன்னை தலையில் தாங்கிசாமி வருதப்பா

நகையும் நட்டும் மறந்து வந்தார் எத்தனை பேர்கள் - நல்ல
நஞ்சையும் புஞ்சையும் விட்டு வந்தார் எத்தனை பேர்கள்
மனைவிமக்களை மறந்துவந்தார் எத்தனைபேர்கள் - எதிலும்
பற்றில்லாமல் உன்னைப் பற்றும் எத்தனை பேர்கள்
(மலையப்பா)

சரணம் சரணம் என்னும் சத்தம் முன்னால் வருகுது -நீண்ட
சரம் சரமாய் பக்தர் கூட்டம் பின்னால் வருகுது
பார்க்கிறப்போபக்தி உணர்ச்சி தன்னால் வருகுது-பாட்டைக்
கேட்கிறப்போ செஞ்ச பாவம் பாதி குறையுது
(மலையப்பா)

கரிமலையின் ஏற்றத்திலே கஷ்டம் இருக்குது - அங்கே
காந்தமலை வாசன் துணை கலந்து நிக்குது
பம்பா நதிதீர்த்தத்திலே பலன் இருக்குது - அங்கே
பல வினையும் தீவினையும் ஓடி ஒழியுது
(மலையப்பா)

-செ. கல்யாணசுந்தரம்

## சரஸ்வதி துதி

வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
கொள்ளை யின்பம் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ளதாம் பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேகத்தின் உள்நின்று ஒளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள்

—பாரதியார்

உ

# சிவமயம்

வேல் வேல் வேல் வேல் வேல்முருகா வேல்
வேல் முருகா வேல்முருகா வேல்முருகா வேல்

பார்வதியாள் பெற்றெடுத்த பால குமரனே
கூர்வேலால் அசுரர்களை வென்ற முருகனே
நேர்வழியில் நான்செல்ல துணை வருபவா
சீர் கொடுத்த செந்தமிழே சீக்கிரமே வாவா (வேல் வேல்)

ஊருசுற்றித் திரிந்தலைந்து உன்னிடம் வந்தேன்
பேருபெற்ற செல்வந்தனாய் சிறந்திடச் செய்தாய்
மாறுதலை கந்தவனே மலையின் வாசகா
வேறுவினை அணுகிடாமல் வேகமுடன் வாவா (வேல் வேல்)

ஆறுமுக வேலவனே அன்பு தெய்வமே
ஆறுகால் சவுக்கையிலே ஆடி வருகவே
ஆறுபடை வீடுகொண்ட அழகு நாயகா
ஆறுதலை தந்திடவே ஆனந்தமாய் வாவா (வேல் வேல்)

செட்டிமகன் சீலனே உன் அருள் வேண்டியே
எட்டிநடை போடுகிறோம் செந்தூர் நோக்கியே
கட்டிவரும் காவடியில் காட்சி தருபவா
பட்டினியைப் போக்கிடவே பறந்தோடி வாவா (வேல் வேல்)

அருள்கொடுத்து அரவணைத்து அன்பு காட்டினாய்
அருளாடி ஐயாவின் உருவில் தோன்றினாய்
இருள் சூழ்ந்த வாழ்க்கையிலே ஒளியைக் கூட்டவா
இரு புறமும் மாதிருக்க இன்பமுடன் வாவா (வேல் வேல்)

துள்ளி விளையாடுகின்ற குழந்தை வேலவா
அள்ளி அணைக்க ஆறுதாயர் கொண்ட பாலகா
வள்ளிதெய்வ யானையோடு வலம் வந்தவா
புள்ளிமயில் ஏறிநீயும் புறப்பட்டு வாவா (வேல் வேல்)

- உ. நந்திராமனாதன்

# சிந்தனை அறும்பு

செங்கோட்டை கவிராஜர் வீடு நாட்டாண்மை அருணாசலம் பிள்ளை

உனக்கு பிறர் என்ன செய்ய வேண்டுமென நினைக்கின்றாயோ நீயும் பிறர்க்கு அதனைச் செய்வாய் எண்ணம் நல்லதாக இருப்பின் இன்று அல்லது நாளை அது நல்ல பயனையே உனக்குத்-தரும். பிறனது நல்வாழ் வினைக் கண்டு அது நமக்கு அமையவில்லையே என்ற அசூயையே மனித அழிவுக்குக் காரணம். பிறனது துன்பம் கண்டு மனம் இளகி தன்னால் இயன்ற உதவி புரிவதே ஆன்மலாபம்(பலம) பெரியாரை துணைக் கொள்வதால் அவர்தம அறிவுரைக் கேட்பதால் உன்னைப்புனிதனாக்கி கொள்ளலாம. விதிவிதி யெனப் புலம்பி சோம்பி இருக்காது வீதிக்கும் விதி இறை அருளால் கிட்டும் என முயற்சி செய்க அழுது புலம்பாதே! எல்லாம் உன் வினையின் விளைவு என்பதனை மனதிற் கொண்டு திருந்து. இனியும் வினை விளையாது இருக்க, சதா இறைவனை மனப்பூர்வமாக தியானம் செய்வதே உன் கடமை மேல் நோட்டமாக எதனையும் பார்க்காமல் ஆழ்ந்து சிந்தித்தால் அருட் புதையல் கிடைக்கும் ஆழ்ந்த சிந்தனையில் தாம் கண்ட அனுபுதி வரத்தினை அவதார புருஷர்கள் நமக்கு அருளிச்செய்தனர் நீ விதைத்து அறுவடை செய்ய முடியாது என ஞானியீர், சிவப்பலம் நீ உண்ணத் தருகினறார்கள் இன்ப துன்ப நிலைகளில் மனத்தினை சமநிலைபடுத்துபவன் எதனைக் கண்டும் அஞ்சுவதில்லை நீ நினைத்து ஒன்றும் நடப்பதில்லை அனைத்தும் முன்பே உன் வினையின் எச்சம் தான். கொடுப்பவன் வாழ்வதும் கெடுப்பவன் தாழ்வதும் கண்டும், மனித உள்ளம் மாராதது வினைப்பயனே. ஏழை மன நிம்மதியுடன் வாழ்வதும பணமுடையவன் நிம்மதி இழப்பதும நியதி நல்லவர் நலிவதும் கெட்டவர் வாழ்வதும் கண்டு உலகம் நம்மை மனம பேதலிக்கச் செய்கிறது. நாடகமேடை யான இந்த உலகத்தில் நாம் நடிகர்கள். நாடக வேடம் உண்மை அல்ல பொய் பொய்யினை மெய் போல் காட்டி மாயையுள் மயக்கும் ஆன்மா இறைவனைப் பற்றினால் உய்வது உறுதி.

# வாழ்த்து

நானார் என் உள்ளம் ஆர் எனத்
தானாய் சிந்தித்து சிவஞானம் தனை
தேனாய் உண்ட மெய்யன்பராம் நம்
"**ஞானா**" என ஒரு மூதறிஞர் நீடுவாழ்க.

சடையினில் கங்கை முடித்த பெருமானை
விடையேறி வந்து அருளும் வித்தகனை
தடையின்றி தமிழ் வளரத் தந்தசதாசிவனை
உடையானை வேண்டப்பெற்ற **உடையாரப்பனின்**
தந்தை வழி நின்று தமிழ் வளர்க்க நீடுவாழ்க.

ஏகன் அநேகன் இறைவன் என்பதும்
பாகம் அம்மைக்கு தந்து பாரினைக் காப்பதும்
ஆகமம் பேணிய மணிவாசகர் அருள் நின்ற
**ஏகப்பன்** எனும் இளையவர் இறையருளால்
முந்தையோர் வழித் தொண்டு நீடுசிறக்க வாழ்க,

-அருணாசலம் பிள்ளை

ஆறிரு தடந்தோள் வாழ்க, அறுமுகம் வாழ்க - வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க, குக்குடம் வாழ்க - செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க, யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க, வாழ்கசீர் அடியார் எல்லாம்.

வான்முகில் வழாது பெய்க
மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க
குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி
விளங்குக உலகம் எல்லாம்.

**மலர்ப் பணி செய்த மாதவர் முருகநாயனார்**
மலர் சச்சிதானந்த மயமானது.' அதன் நிறம்-சத்து, வடிவு-சித்து மணம் - ஆனந்தம் ஆக சத்து, சித்து, ஆனந்தம் என்ற இந்த மூன்றையும் உடையது மலர்.

பொழுது புலர ஐந்து நாழிகைக்கு முன் எழுந்து நீராடி திருநீறு புனைந்து திரு நந்தவனம் செல்வார்-மலர்கின்ற பருவத்தில் உள்ள மலர்களை எல்லாம் பறித்துத் தனித்தனியே கூடைகளில் நிரப்புவார் மந்தாரம், கொன்றை சண்பகம் முதலியன **கோட்டு-பூக்கள்** நந்தியாவட்டை, அணி, முல்லை முதலிய **செடிப்-பூக்கள்**, சம்பங்கி, சாதி முதலியன கொடிப்பூக்கள். தாமரை, நீலோறபலம் செங்கழுநீர் முதலிய **நீர் பூக்கள்** ஆகிய நான்கு வகையான மலர்களையும் இனிது பறிப்பார். நெறிதவருது எடுத்து திருமலர்களைக் கொண்டு போய் தூய்மையான தனி இடத்தில் வைத்துக்கொள்வார். கோங்கும் கோவை சுருக்கிக்கட்டும்கண்டை; இணைத்துக்கட்டும் மாலை; தண்டிற்கட்டும் கண்ணி; பிணைத்துக்கட்டும் பிணையல்; தொடுத்துக்கட்டும் தொடையில்; என்று மலர்களை ஆறுவகையாகச் செய்து திருமாலைகளை அமைப்பார். அவ்வாறு அமைத்த திருமாலைகளை ஆறுகாலங்களிலும் சுமந்து கொண்டு சென்று சிவபெருமானக்குச் சாத்தி அர்ச்சனை புரிவார்.





